# திருக்கருவைப்
# பதிற்றுப் பத்து அந்தாதி

ஆசிரியர்:

அதிவீர ராம பாண்டியனார்

பொழிப்புரை:

தமிழ்க்கடல், இராய. சொ.

வெளியீடு:

அருள்மிகு சங்கர நாராயண சுவாமி
திருக்கோயில்
சங்கர நயினார் கோவில்
1974

# திருக்கருவைப்
# பதிற்றுப் பத்து அந்தாதி

*ஆசிரியர்:*

அதிவீர ராம பாண்டியனுர்

*பொழிப்புரை:*

தமிழ்க்கடல், இராய. சொ.

*வெளியீடு:*

*அருள்மிகு சங்கர நாராயணசுவாமி*

*திருக்கோயில்*

சங்கர நயினர் கோவில்

*1974*

சிவமயம்

# திருக்கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதி

## நூல் முகம்

திருக்கருவை என்பது கரி வலம் வந்த நல்லூர். இத்திருத்தலம் இராசபாளையத்தினின்றும் சங்கர நாராயணர் கோயில் செல்லும் வழியில் சங்கரநாராயணர் கோயிலுக்குச் சில கற்கள் முன்னே இருக்கின்றது. புகழ் பெற்ற சங்கரநாராயணர் கோயிலோடு இத்திருக்கோயில் சேர்த்து நிருவகிக்கப்பெற்று வருகிறது.

இக் கோவில் திருப்பணி, நாட்டுக்கோட்டை நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த காரைக்குடியை அடுத்த "மாநகரி" எனும் ஊரினராகிய திருவாளர் லெ. அரு. அருணசலம் செட்டியார் அவர்களால் பல ஆண்டுகளுக்கு முன் செய்யப்பெற்றது. கோவில் அமைப்பு நன்ருக உள்ளது.

இத்திருக்கோயில், வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. பாண்டிய மன்னர் காலத்து இறுதியில் வாழ்ந்ததாகக் கருதப்பெறுகின்ற அதிவீர ராம பாண்டியன்என்ற பெரும் புலவர் இப்பகுதியை ஆண்டனர் என்ப.

இப் புலவர் பெருமான் ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தனர் என்பர் காலக்கணக்கர். இவர் இக் கருவாபுரிக்கு, "திருக்கருவை வெண்பா அந்தாதி," "திருக்கருவைக் கலித்துறை அந்தாதி," "திருக்கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதி," என மூன்று அந்தாதி நூல்கள் செய்துள்ளார். இம்மூன்றனுள்ளும் சுவை மிக்கதும், உள்ளத்தை உருக்குவதும் இப் பதிற்றுப்பத்து அந்தாதியே. இந்நூலே, "குட்டித் திருவாசகம்" எனத் தமிழ்ப்பெருமக்கள் போற்றுவாராயினர்.

திருவாசகத்தின் கருத்துக்கள், சொற்கள், சொல் தொடர்கள், வரிகள், பாடற் பகுதிகள் ஆகியவற்றை அப்படி அப்படியே எடுத்தாண்டு பேறுபெற்றிருக்கின்ருர் இப்பெரும் புலவர்.

இப் புலவர் பெருமானின் பக்திக்கு எடுத்துக்காட்டு கருவாபுரியைப்பற்றிய இவ் அந்தாதிகள். இவை தவிர, இவ் ஆசிரியர் நீதியை ஆணித்தரமாக எடுத்து உரைக்கும் "வெற்றி வேற்கை'' எனும் நறுந்தொகை நூலேயும் ஆக்கியிருக்கின்ருர். நிற்க,

'புலவர்க்கு ஔடதம்' என்று சிறப்பிக்கப்பெறும் நளச்சக்கரவர்த்தியின் காதையாகிய நைடதத்தை, காதல் சுவை ததும்பத் தமிழில் பாடியவர் இப்புலவர்ஏறே.

நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன்
புகழ்ச்சரிதம் நெடுநீர் வைப்பில்
புலவர்களி அமிழ்துஒழுகு புதுமொழிகூட்
டுணத்தமிழால் புனைதல் செய்தான்;
வலன்உயர்த்த அண்ணல்அம்சேல் வான்தொடுபொன்
கோட்டுஇமய வரையில் தீட்டி,
அலர்தலேமா நிலம்புரக்கும் அதிவீர
ராமன்இகல் அரசர் ஏறே.

என்ற அரிய இப்பாடல் பெருமிதமாக அதற்குச் சான்று பகர்கிறது. இந்நூலாசிரியர் காசிகாண்டம், கூர்ம புராணம், இலிங்கபுராணம் என்ற பெரு நூல்களும் செய்தனர் என்ப.

அதிவீர ராம பாண்டியனுருக்கு முன் தோன்றிய ஒத்த புலமை வாய்ந்த வரதுங்க ராம பாண்டியன் என்ற புலவர் ஒருவர் இருந்தனர் என்றும், அவர்தம் வாழ்க்கைத்

துணைவியும் நல்ல புலமை பெற்றிருந்தனர் எனவும் வரலாறு சொல்லும். தாம் பாடும் நூல்களை எல்லாம் பண்பிற் சிறந்த தம் அண்ணியாரிடம் காட்டி அதிவீர ராம பாண்டியனார் மகிழ்ச்சி அடைவாராம்.

அதிவீர ராம பாண்டியனாரின் பக்திப் பெருக்கெடுத்தோடும் இப் பதிற்றுப்பத்து அந்தாதியை, அறுபது ஆண்டுகளுக்குமுன் பாடம் கேட்டு மகிழ்ந்தேன். அந்நூலை இன்று பொழிப்புரைகண்டு வெளியிட்டுப் பேறு பெறுகின்றேன்.

கருவாபுரியில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுக்கு "பால்வண்ண நாதர்," "களா ஈசர்," "முகலிங்கர்", என்ற திருப்பெயர்கள் உள. அம்பிகைக்கு "ஒப்பனை" என்பது பெயர். அங்குத் தலவிருட்சம் களாமரம்.

வேறுபட்ட, பத்து வகையான பத்துப் பத்துப் பாக்களைக்கொண்டு விளங்குவதால் பதிற்றுப்பத்து என்றும், முன் பாடலின் முடிவை அடுத்த பாடலின் முதல் தொடர்வதால் அந்தாதி எனவும் இந்நூல் பெயர் பெற்றது. இவ் அந்தாதியின் முதற்பாடல் "சீரார் கமலச் சேவடி" எனத் தொடங்கி, நூறாவது பாடல் "சீர்கள் போற்றியே" என்று முடிவு பெறுவதால் இறுதிப் பாட்டின் ஈறு, முதல் பாடலைத் தொடருகின்றது.

இந்தப் பக்திப் பனுவலை, கருவாபுரிப் பால்வண்ண நாதர் திருக்கோவிலார், திருக்குட நீராட்டு விழாவையொட்டி வெளியிட்டுத் தம் கடமையை நிறைவேற்றுகின்றனர். இத் திருக்கோவிலையும் சங்கரநாராயணர் திருக்கோயிலையும் ஒருசேர நிருவகிக்கும் அறங்காவலர்களையும், நிருவாக அதிகாரியையும் இவ் அரிய நூலை வெளியிட்டமைக்காக மனமாரப் பாராட்டுகின்றேன்.

இந்நூல் வெளியீட்டிற்குப் பெருங்காரணராக இருந்தவரும் முன்னுரை வழங்கியவருமான இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, மதுரை, துணை ஆணையர், என் அருமை மைந்தர் முருகேசனார்க்கு வாழ்த்து.

திருவாசகத்தோடு ஒப்பிடத்தக்க இந்தச் சிறந்த பாடல்களைப் பெறும் பேறுபெற்ற, "உமை ஒப்பனையாளை இடப்புறம் கொண்ட" பால்வண்ணநாதப் பெருமானுக்கு வணக்கம்.

காரைக்குடி<br>19—5—74

இராய. சொ.

உ

சிவமயம்

# முன்னுரை

திரு. ம. அ. முருகேசன் பி. ஏ. பி. எல்.
துணை ஆணையர்
இந்துசமய அறநிலைய ஆட்சித் துறை—மதுரை.

முடியுடை வேந்தர் மூவருள்ளும் சங்கம் வைத்துத் தமிழ்வளர்த்த பெருமை பாண்டியர்க்கே. இமயம்வரை விரிந்த புகழ் குன்றி, குறுநில மன்னர்களாக வாழ்ந்த காலத்தும் அன்னார் தமிழையும் தமிழொடு வளர்ந்த சமயத்தையும் பேணிப் புரக்கும் கலையை மறந்தாரிலர். அதற்குச் சான்று வரதுங்க ராம பாண்டியரும் அவர்தம் இளவல் அதிவீர ராம பாண்டியருமே.

சேர சோழ அரசுகளை உள்ளிட்ட பாண்டியப் பேரரசு வீழ்ச்சியடைந்த பிறகு, பாண்டிய மன்னர்கள் குறுநில மன்னர்களாகச் சிதறி, தென்தமிழ் நாட்டின் சில பகுதிகளை ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களுள் வரதுங்க ராம பாண்டியரும், அவர்தம் அருமைத்தம்பி அதிவீர ராம பாண்டியரும், தற்போதைய முகவை, நெல்லை மாவட்டங்களின் பகுதிகளை, கரிவலம் வந்த நல்லூரைத் தலைநகராகக் கொண்டு பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசாண்டு வந்தனர். இவ்விருவரும் ஆழ்ந்த தமிழ்ப் புலமையும் சமயப் பற்றும் கொண்ட சான்றோராய்த் திகழ்ந்தனர். வரதுங்க ராம பாண்டியரின் வாழ்க்கைத் துணைவியாரும் நற்றமிழ் வல்ல மூதாட்டியே. நைடதம், வெற்றி வேற்கை முதலிய நூல்களைப் பாடிய அதிவீர ராம பாண்டியர், பக்திப் பனுவல்கள் பலவும் பாடியுள்ளார்.

கரிவலம்வந்தநல்லூரில் எழுந்தருளி இருக்கும் இறைவன் பால்வண்ணநாதர், இறைவி ஒப்பனைநாயகி. இவர்கள்பேரில் அதிவீர ராம பாண்டியர் "திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி'' என்று நூறு பாடல்களைப் பாடியுள்ளார். இந்நூலின் அருமையை அறிந்தோர் இதனை, 'குட்டித் திருவாசகம்' என்று பாராட்டுவர். எளியநடையும் இனிய தமிழும் உள்ளத்தை உருக்கி இறைவன்பால் ஈர்க்கும் பக்தியும் இந்த நூலின் சிறப்பியல்புகள். படிக்கும் பொழுது இதுவும் திருமுறையோ என்று ஐயம் எழச் செய்யும் இடங்கள் அநேகம். பல பாடல்களை எனது ஞானத்தந்தையும், இந்நூலின் பதிப்பாசிரியருமான "தமிழ்க்கடல், சிவமணி'' திரு. இராய. சொ. அவர்கள் சொல்லக்கேட்டு நான் உளம் நெகிழ்ந்ததுண்டு.

அஞ்சலென்ற கரதலமும், கணபணக்கங் கணமும்,
அரைக்கிசைந்த புலிஉடையும், அம்புலிச்செஞ் சடையும்,
கஞ்சமலர்ச் சேவடியும், கனைகழலும், சிலம்பும்,
கருணைபொழி திருமுகமும், கண்களொரு மூன்றும்,
நஞ்சைஉண்ட மணிமிடறும், முந்நூலும், மார்பும்,
நலம்திகழ்வெண் நீற்றொளியும், மறிமானும், மழுவும்,
பஞ்சடிச்சிற் றிடைஉமையாள் ஒப்பனைபா கமுமாய்ப்
பால்வண்ணன் உளத்திருக்கப் பயமுண்டோ எமக்கே?

என்பது ஒரு தனிப்பாடல். இதனைப் பாடியவர் வரதுங்க ராம பாண்டியர். இதை ஒப்பது அதிவீர ராம பாண்டியருடைய "உரகாபரணத் திருமார்பும்'' என்ற இந்நூலின் ஒன்பதாம் பாடல். இப்பாடல்கள் இறைவன் இறைவி திருக்கோலத்தைக் கண்முன் நிறுத்துகின்றன.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலை வெளியிட்டுப் பெரும்புகழ் பெறுகின்றவர்கள் அருள்மிகு சங்கர நாராயணர் திருக்கோவில் நிருவாகத்தினர். அவர்களே

கருவைப் பால்வண்ணநாதர் கோவிலையும் நிருவகிக்கின்றனர். பல ஆண்டுகளுக்குப் பின்னர் இத் திருக்கோவிலின் மங்கல நன்னீராட்டுப் பெருவிழா நடைபெறுகிறது. அவ்விழாவை ஒட்டி இந்நூல் வெளியிடப் பெறுகிறது. வெளியீட்டுக்குப் பொறுப்பான அறங்காவலர்களுக்கும், செயல் அலுவலருக்கும் எனது பாராட்டுக்கள்.

இந்நூலை நல்லமுறையில் பதிப்பித்துப் பொழிப்புரையும் எழுதி உதவி இருக்கிறுர், தமிழும் சைவமும் இரு கண்களெனப் போற்றும் எந்தை, தமிழ்க்கடல், இராய. சொ. அவர்கள். அவர்தம் தமிழ்ப் புலமையையும் தமிழ்த்தொண்டையும், சமயத்தொண்டையும் தமிழ்கூறும் நல்லுலகறியும். அவர்களின் இத்தொண்டுக்கு நாடு கடமைப்பட்டிருக்கிறது.

மதுரை.
8—5—74

ம. அ. முருகேசன்

உ

சிவமயம்

# திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதி

## காப்பு

### விநாயக வணக்கம்

ஆன கருவைப் பதிற்றுப்பத்து
அந்தா திச்சொல் அலங்கல்முற்றும்
ஞான உருவாம் களவீசன்
நளின சரணம் மிசைச்சாத்தத்
தான அருவி பொழிதடக்கைத்
தறுகண் சிறுகண் புகர்முகத்துக்
கூனல் இளவெண் பிறைக்கோட்டுக்
குணகுஞ் சரத்தின் அடிதொழுவாம்.

பொழிப்புரை: திருக்கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதியான சொல்மாலை முழுவதையும், அறிவுத் திருவுருவான களவீசனது தாமரைபோன்ற திருவடியின்மீது அணிவதற்கு; மதத்தை அருவிபோல் சொரியும் நீண்ட துதிக்கையையும், அஞ்சாமையையும், சிறு கண்களையும், புள்ளிகள் பொருந்திய முகத்தையும், வளைந்த, இளமையுள்ள, வெள்ளிய, பிறையனைய, கொம்புகளையும் உடைய குணங்களால் உயர்ந்த யானைமுகக் கடவுளின் திருவடிகளைப் போற்றுவாம்.

கருவை- கரிவலம்வந்தநல்லூர் என வழங்கும் கருவாபுரி. பதிற்றுப் பத்து - பத்து வகையான பத்துப் பத்துப் பாக்கள். களவீசன் - கருவாபுரியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான். களாமரம் அங்குத் தல விருட்சம்.

# திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதி

## முதல் பத்து

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

1. சீரார் கமலச் சேவடிஎன்
   சிந்தை இருத்தி, உனதுதிருப்
   பேர்ஆ யிரமும் எடுத்துஓதிப்
   'பெம்மான்! கருவை எம்மான்!'என்று
   ஆரா அமுதம் உண்டவர்போல்
   அனந்தா னந்தத்து அகம்நெகிழ
   வாரா இன்பம் அறிவித்தாய்!
   அறியேன் இதற்குஓர் வரல்ஆறே.

பொழிப்புரை: சிறப்புப் பொருந்திய தாமரையனைய செவ்விய திருவடிகளை என் உள்ளத்தில் வைத்து, உன்னுடைய திருப்பேர் ஆயிரமும் எடுத்துச்சொல்லி "எம்பெருமானே! கருவாபுரியில் எழுந்தருளியிருக்கும் எம்மானே!" என வணங்கித் தெவிட்டாத அமுதத்தை உண்டவர்களைப் போல அளவில்லாத மகிழ்ச்சியினால் மனம் உருக; பெறமுடியாத இன்பத்தைத் தந்தருளினாய். இதற்கு ஏற்றதோர் காரணம் என்ன என யானறியேன்.

2. ஆறாக் காமக் கொடியகனல்
   ஐவர் மூட்ட அவலமனம்
   நீறாய் வெந்து கிடப்பேனை,
   நின்தாள் வழுத்த நினைவுதந்து
   மாறா நேயத்து இரவுபகல்
   மறவாது இருக்க வரம்அளித்தாய்!
   சீறாடு அரவம் முடித்தசடைக்
   கருவை வாழும் செழுஞ்சுடரே!

பொழிப்புரை:- அவியாத ஆசை என்னும் கொடுமையான தீயை, ஐம்புலன்களும் உண்டாக்க; அதனால் அழிந்த உள்ளம் நீறு ஆகும்படி வெந்து கிடக்கின்ற என்னை நின்னுடைய திருவடியைப்போற்ற நினைவை ஈந்து, மாறு இல்லாத அன்புடனே இரவும் பகலும் மறவாது வாழ வரம் தந்து அருளினாய்; சீறி ஆடுகின்ற பாம்பை அணிந்த சடையை உடைய, கருவாபுரியில் எழுந்தருளி இருக்கின்ற செழுமையான ஒளிமயமானவனே!

3. சுடரே! வலியத் தடுத்துஆண்ட
துணையே! பிறவித் தொடுகுழிவீழ்
இடரே அகலக் களா நீழல்
இருந்த கோவே! எம்பெருமான்!
உடலே ஓம்பித் திரியும்எனை
உன்னை நினைக்கப் பணித்தஅருட்
கடலே! உனையன் றொருதெய்வம்
காண வழுத்தக் கடவேனோ?

பொழிப்புரை:- ஒளிப்பிழம்பே! வலியவந்து தடுத்து ஆட்கொண்ட உயிர்த்துணையே! பிறவி என்னும் படுகுழியில் விழும் என்னை, துன்பம் நீங்கி யான் கடைத்தேற, திருக்களா நிழலில் எழுந்தருளி இருக்கும் தலைவனே! சிவபெருமானே! உடம்பையே பாதுகாத்துத்திரியும் என்னை, உன்னை எண்ணி உய்யுமாறு ஏவிய அருட்கடலே! உன்னைத்தவிரப் பிறிதொரு தெய்வத்தை நான் காண்பேனோ? கும்பிடுவேனா? (மாட்டேன் என்பது கருத்து )

4 வேனில் சிலைவேள் தொடுகணைக்கும்
விளங்கும் மகளிர் உளங்கவற்றும்
பானல் கொடிய விழிவலைக்கும்
பற்றாய் வருந்தி, அனுதினமும்
ஈனத் துயரக் கடல்அழுந்தும்
எனையும் பொருளா அடிமைகொண்ட
ஞானத்து உருவே! தமிழ்க்கருவை
நம்பா! பொதுவில் நடித்தோனே!

பொழிப்புரை:- வேனில் காலத்திற்கு உரிய கரும்பு வில்லைப்பெற்ற மன்மதன் விடும் அம்புகளுக்கும், தோற்றம்மிக்க மகளிருடைய உள்ளத்தைக்கொள்ளைகொள்ளும் நீலோற்பலம் போன்ற கொடுமையுடைய கண்களாகியவலைகளுக்கும்; இலக்காகி வருத்தம் அடைந்துநாள்தோறும் இழிந்த துன்பக்கடலில் மூழ்கிக்கிடக்கும் எளியேனையும் பொருட்படுத்தி அடிமையாகக்கொண்ட பேரறிவின் வடிவமே! தமிழ் வழங்கும் கருவாபுரியில் எழுந்தருளியிருக்கின்ற இறைவனே! பொன்னம்பலத்தில் கூத்தாடும் கடவுளே!

'வேனில் வேள் மலர்க்கணைக்கும்' என்ற திருவாசகப்பாடலைப் பெரிதும் தழுவியது இப்பாடல்

5. நடித்தேன் பொய்க்கூடு எடுத்து,அவமே
நன்னுள் கழிய; இந்நாளில்
படித்தேன் உனது திருநாமம்;
பண்டை வினையின் பற்றுஅறுத்தேன்;
பிடித்தேன் பிறவிக் கடல்நீந்தப்
பெரிய புணையா உனதுஅடியை;
முடித்தேன் உள்ளத்து எண்ணமெல்லாம்;
கருவை வாழும் முன்னேனே!

பொழிப்புரை:: பொய்யாகிய இவ்வுடம்பை எடுத்து நல்ல நாட்களெலாம் வீணாகக் கழிய இதுகாறும் நடித்தேன். இப்பொழுதுதான் உன் திருப்பெயர்களை ஓதினேன். அதனால் பழைய வினையின் தொடர்பை அறுத்துக்கொண்டேன். பிறவிப் பெருங்கடலை நீந்தப் பெரிய தெப்பமாக உன் திருவடிகளைப் பிடித்துக்கொண்டேன். அப்பிடிப்பால் என் உள்ளத்தில் தோன்றும் நினைவுகளை எல்லாம் முடித்துக்கொண்டேன் (இனி எனக்குக் குறைவு ஏது) கருவாபுரியில் எழுந்தருளி இருக்கின்ற முழுமுதற் கடவுளே!

"பாலனாய்க் கழித்த நாளும்'' என்ற அப்பர் சுவாமிகள் தேவாரத்துடன் இப்பாட்டு ஒப்பிடத்தக்கது. "இறைவனடி சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர்'' என்பது திருக்குறள்.

6. முன்னைப் பிறவித் தவப்பயனே!
முழுதும் அறியா மூடன்இவன்
என்னக் கருத்தில் எண்ணியோ!
யாதோ அறியேன், இரவுபகல்
கன்னல் பாகில், கோல்தேனில்
கனியில் கனிந்த கவிபாட
அன்னத் தொகுதி வயல்கருவை
ஆண்டான் என்னை ஆண்டதுவே.

பொழிப்புரை:- முற்பிறப்பில் செய்த தவத்தின்பயன்தானே! ஒன்றும் தெரியாத மூடன் இவன் என்ற திருவுள்ளக் கருத்தோ! ஏதென்று யானறியேன். இரவும்பகலும், கருப்புக்கட்டியைவிட, கொம்புத்தேனுக்கும் மேலாக, பழத்தையும் விஞ்ச, கனிவு பொருந்திய கவிபாட என்னை ஆக்கி, அன்னப்பறவைகள் மலகிய வயல்களை உடைய கருவாபுரிக்கு இறைவன் என்னை ஆண்டமைக்குக் காரணம்

காரணம், தவப்பயனே! எனக்கூட்டுக "பத்தனாய்ப் பணிந்து அடியேன் தன்னைப் பன்னாள் பாமாலை பாடப் பயில்வித்தானை'' என்ற அப்பர் சுவாமிகள் கருத்து ஒப்புநோக்கத்தக்கது.

"கன்னல்பாகில் கோல்தேனில் கனியில் கனிந்த கவி'' என்று தன் கவியைக் கூறுவது இவ் ஆசிரியரின் பெருமிதத்தைக் காட்டுகிறது.

7. ஆண்ட குரவன் ஆவானை,
அல்லல் பிறவி அறுப்பானை,
வேண்டும் பதவி தருவானை,
வெளிவீட்டு இன்பம் அளிப்பானைத்,
தூண்டல் செய்யா மணிவிளக்கைத்,
தொழில்மூன்று இயற்றும் தொல்லோனைக்,
காண்டற்கு அரிய பேரொளியைக்
களாவின் நிழற்கீழ்க் கண்டேனே.

பொழிப்புரை:- என்னை ஆண்ட ஆசிரியன் ஆவானை, துயரம்தரும் பிறவியை அறுப்பவனை, வேண்டிய பதவிகளையெல்லாம் தருகின்றவனை, வீட்டின்பத்தை நல்குபவனை, தூண்டா மணிவிளக்கை, ஆக்கல் அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்யும் பழமையானவனை, காணமுடியாத பேரொளிப் பிழம்பைக் களாமரத்தின் நிழலில் கண்டுகொண்டேன்.

"அல்லல் பிறவி அறுப்பானே ஓ" என்பது திருவாசகம்.

8. கண்ட கண்கள் புனல்பாயக்,
களிப்பாய் உள்ளம் கரையழிய,
விண்ட மொழியின் நாக்குழற,
விம்மி மேனி மயிர்பொடிப்பப்,
பண்டை வசம்போய்ப் பரவசமாய்ப்
பரமா னந்தத் தெளிநறவம்
உண்டு தெவிட்டா அருள்புரிந்தான்
கருவை வாழும் உரவோனே.

பொழிப்புரை:- அவனைக்கண்ட கண்கள் நீர் சொரிய, மனம் மகிழ்ச்சியால் கரைகடக்க, புகழ் விரிக்கும் சொற்களினால் நாக்குத் தடுமாற, விம்மிதத்தால் உடம்பு மயிர்க்கூச்செறிய, தன்வயம் இழந்து, பரவசப்பட்டு, மேலான மகிழ்ச்சித் தெளிவாகிய தேனைப் பருகித் தெவிட்டாத அருளைச் செய்தான்; கருவையில் வாழும் ஞானமூர்த்தி.

உரம் : அறிவு.

9. உரகா பரணத் திருமார்பும்,
உமைஒப் பனையாள் இடப்புறமும்,
சிரமா லிகையும், புரிசடையும்,
செய்ய வாயும், கறைமிடறும்,
வரதா பயமும் மழுமானும்
வயங்கு கரமும், மலரடியும்,
கருவா புரியான் வெளிப்படுத்திக்
காட்சி கொடுத்து நின்றனே

பொழிப்புரை - பாம்பணிந்த திருமார்பும், உமையாகிய ஒப்பனை அன்னை யின் இடப்பாகமும், தலைமாலையும் முறுக்கிய சடையும், சிவந்த வாயும், திருநீலகண்டமும், வரதமும், அபயமும் அளிக்கும், மழுவும், மானும் ஏந்திய கைகளும், தாமரையை ஒத்த திருவடிகளும் தோன்றக் கருவா புரியில் எழுந்தருளி இருக்கின்ற கடவுள் காட்சிதந்து நின்றன்.

இப் பாடலின் கருத்தமைய இவ்வாசிரியரின் அண்ணன் வரதுங்க ராமபாண்டியன் பாடிய 'அஞ்சல்என்ற கரதலமும்' என்ற அரிய பாடல் இங்கு நினைவுறத் தக்கது.

சிவபெருமானின் திருவுருவத்தை இப்பாடல் படம்பிடித்துக் காட்டு கிறது. உமை- அம்பிகையின் பொதுப்பெயர். ஒப்பனை – கருவாபுரியில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் பெயர்.

10. நின்ற நிலையும், செய்தொழிலும்,
நினைத்த குறியும், வழிபாடும்,
ஒன்று பதமும், பதம்கடந்த
உண்மைப் பொருளும் அறியேனை,
இன்றுன் அடியார் உடன்கூட
எண்ணம் புரிந்த இனியஅருள்
நன்று! நன்று! தமிழ்க்கருவை
நம்பா! உம்பர் நாயகனே!

பொழிப்புரை:- யான் நிற்கின்ற நிலையையும், செய்கின்ற செயல்களை யும், கருதும் மூர்த்திகளையும், அம்மூர்த்திகளுக்குச் செய்யும் வழி பாட்டையும், அவ்வழிபாட்டால் பொருந்தும் பதவிகளையும், அப் பதவி களைக் கடந்து நின்ற மெய்ப்பொருளையும் அறியாத அடியேனை; இற்றை நாள் உன் மெய்யடியாருடன் கூடுமாறு திருவருள்பாலித்த இனிய கருணை நன்று! நன்று! தமிழ்க் கருவையில் எழுந்தருளி இருக்கின்ற சிவபெருமானே! தேவர்கட்கெல்லாம் இறைவனே!

## இரண்டாம் பத்து

*எழுசீர் ஆசிரிய விருத்தம்*

11. நாயகன், முகுந்தன், சததளப் பொகுட்டில்
நான்முகன் என்னவீற் றிருக்கும்
தூயவன், கருவைக் களாநிழல் அமர்ந்தோன்
துணைஅடிப் புகழினை வழுத்தி,
மாயிரு ஞாலம் எடுத்தெடுத்து ஏத்த
வரம்பெறு மதுரநா வலர்கள்
சேயிரு விசும்பில் கற்பக நீழல்
செல்வமும் வேண்டுவ திலையே.

பொழிப்புரை :- சிவபெருமானும், திருமாலும், நூறு இதழ்களை உடைய தாமரை மலரில் உறையும் பிரமனும் என்று சொல்லுமாறு வீற்றிருந்து அருளுகின்ற புனிதமானவனாகிய, திருக்கருவையில், களா மரத்தின் நீழலில் அமர்ந்த இறைவனது இரண்டு திருவடிகளின் புகழைப் பாடி, பெரிய உலகத்திலுள்ளார் சொல்லிச் சொல்லிப் பாராட்ட, வரம் பெறுகின்ற இனிய நா வல்லவர்கள், மிக உயர்ந்த விண்ணுலகத்தில் உள்ள கற்பக நீழலில் வாழும் இந்திரச் செல்வத்தையும் வேண்டமாட்டார்.

மும்மூர்த்திகளும் ஒருவனே என்பது கருத்து.

12. வேண்டுவது ஒன்று; தமியன்,எப் பிறப்பும்
வெந்தழல் நரகிடை விழினும்
காண்தகு சிறப்பின் அரம்பையர் சூழக்
கற்பக நீழல்வை கிடினும்,
தூண்டரு சுடரே! களாநிழல் அமர்ந்த
சோதியே! கருவைநா யகனே!
ஆண்தகாய்! நினது திருவடிக் கமலத்து
அன்பெனும் அழிவிலாப் பொருளே.

பொழிப்புரை :- யான் உன்னிடத்தில் வேண்டும் பொருள் ஒன்று உண்டு. அது யாதெனில், எப் பிறவி யான் எடுத்தாலும், அன்றி, கொடிய சுடுகின்ற நரகக் குழியில் வீழ்ந்தாலும், அல்லது காணத்தக்க பெருமையையுடைய அரமகளிர் சூழ்ந்திருக்கக் கற்பக மரத்தின் நீழலில் அமர்ந்திருக்கும் இந்திரப் பதவியை எய்தினும், தூண்டா மணி விளக்கே! களா நீழலில் அமர்ந்த ஒளியே! கருவையம் பதிக்குத் தலைவனே! ஆண் தன்மையில் சிறந்தவனே! உன் திருவடித் தாமரையில் பொருந்தும் அன்பு என்று சொல்லத்தக்க அழிவில்லாத ஒரு பொருளே!

அழிவிலாப் பொருளே, வேண்டுவது என்க.

13. அழிவிலாப் பொருளே! பழமறைக் கொழுந்தே!
அலைஎறி அமுதவா ரிதியே!
ஒழிவிலாது அருளும் கற்பகக் கனியே!
ஒப்பனை மைப்பரந்து எறிக்கும்
விழியினல் உருக ஒருபுறம் அளித்த
விமலனே! கருவையம் பரனே!
இழிவிலாப் புணையாம் பிறவியங் கடல்நின்று
ஏறநான் பெற்றதுஉன் பதமே

பொழிப்புரை :- அழிவில்லாத பொருளாக அமைந்தவனே! பழமையான வேதங்களின் கொழுந்தே! அலைகளைக் கொழிக்கின்ற அமுதக் கடலே! இடையீடின்றி வழங்குகின்ற கற்பகப் பழமே! ஒப்பனைத் தாயின் மை தீட்டிய ஒளி விடுகின்ற கண்களினல் உருகுமாறு உடம்பில் ஒரு பாதியைத் தந்தருளிய மேலானவனே! திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் இறைவனே! கெடுதல் இல்லாத தெப்பமாகப் பிறவிக்கடலினின்றும் ஏற; நான பெற்றுக் கொண்டது உனது திருவடியே.

14. உன்பதம் ஏத்தித் துன்பவேர் அறுக்க
உலகினில் திருவுடன் வாழும்
மன்பதைக்கு எல்லாம் எய்திடும் தரமோ!
வலியவந்து எனைத்தடுத்து ஆண்டுஉன்
அன்புவந்து ஒருவர் அறிந்திடா அறிவும்
அறிவுறுத் தருளினை! அதற்கு
முன்புஎது புரிந்தேன்? கருவையம் பதிவாழ்
முதல்வனே! முக்கண்வா னவனே!

பொழிப்புரை :- உன் திருவடிகளைத் தொழுது, துயரத்தை வேருடன் களைய, இவ்வுலகத்தில் செல்வத்துடன் வாழும் மக்களுக்கு எல்லாம் பொருந்துவதாகுமா! நீயாக வலிய வந்து என் போக்கினின்றும் என்னைத் தடுத்து ஆட்கொண்டு, என்னிடம் அன்பு கொண்டு, மற்றொருவர் அறிய முடியாத மெய்யறிவை எனக்கு அறிவுறுத்தி அருளினய். நீ அப்படிச் செய்ய முற்பிறப்பில் யான் என்ன நல்வினை செய்தேனே! கருவாபுரியில் வாழ்கின்ற முழுமுதற் கடவுளே! மூன்று கண் படைத்த தேவனே! "இவ் உலகில் செல்வம் நனி பெற்ேறார் கடவுளை அடைவது அருமையாய் இருக்க, என்னை நீ வலிந்து ஆட்கொண்டது யான் முன் செய்த தவமே" என மொழிகின்றர்; செல்வத்தில் சிறந்த மன்னராக இருந்து செங்கோலோச்சிய இந்நூல் ஆசிரியர்.

15. வான்,எரி அறல்,கால், மண்ணெனப் பகுக்க
வரும்பெரும் பூதம்ஓர் ஐந்தும்
ஆனமுக் குணமும் கரணம்ஓர் நான்கும்
அனைத்துமாய் ஆதிஈறு இன்றி
ஊன்உறை உடலுக்கு உயிருமாய் உயிருக்கு
உணர்வுமாய் ஒன்றினும் தோயா
ஞானநா யகனே! கருவையம் பரனே!
நான்அறிந்து உரைக்குமாறு எவனோ!

பொழிப்புரை :- விண், நெருப்பு நீர், காற்று, நிலம் என வகுக்கப்பெற்ற பெரிய பூதங்கள் ஐந்தும், அமைந்த குணங்கள் மூன்றும், அந்தக் கரணங்கள் நான்கும் ஆகிய எல்லாமாயும், முதலும் முடிவும் இல்லாத வனாயும், தசையுடன் கூடிய உடம்புக்கு உயிராகவும், அவ்வுயிருக்கு உணர்வாகவும் நின்றும் அப்பொருள்கள் எதிலும் தோய்தல் இல்லாத அறிவு வடிவமான இறைவனே! கருவாபுரியானே! உன்னை நான் அறிந்து சொல்லும் வகை எவ்வாறு!

16. எவன்உயிர்க்கு உயிராய் எள்ளும்எண் ணெயும்போல்
எங்கணும் இடையறா நின்றான்,
எவன்அனைத்து உலகும் ஈன்றுகாத் தழிக்க
இறைமைசால் மூவுருவு எடுத்தான்,
எவன்முதல் இடைஈறு இன்றிஎஞ் ஞான்றும்
ஈறிலா மறைமுடி இருப்பான்,
அவன்எனைப் புரக்கத் திருக்களா நீழல்
அமர்ந்தருள் புரிந்தகா ரணனே.

பொழிப்புரை:- உயிருக்கு உயிராய்; எள்ளும் எண்ணெயும் போல எங்கும் நீக்கமற நிற்கின்றவன் எவனோ, எல்லா உலகத்தையும் ஆக்கி அளித்து அழிப்பதற்குத் தலைமை மிக்க மூன்று திருவுரு எடுத்தவன் எவனோ, முதலும் நடுவும் முடிவும் இல்லாமல் எப்பொழுதும் முடிவில்லாத வேத முடிமேல் இருப்பவன்எவனோ, அவனே என்னைக்காத்தருளத் திருக்களா நீழலில்வீற்றிருந்து அருள் செய்யக் காரணம் ஆனவன் ஆவான்

இப்பாடல் 'மயர்வற மதிநலம்' என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் கருத்தைத்தழுவியது.

17. காரணம் ஏதென்று அறிகிலேன், தமியேன்
கல்தல மனத்தினைக் கரைத்து,
வார்அணி முலையாள் ஒப்பனை யோடு
மழவிடை மேல்எழுந்து அருளி
நாரணன் அறியாத் திருவுருக் காட்டி,
நல்அருள் சுரந்துவாழ் வித்தான்;
பூரணன்; கருவைக் களாநிழல் அமர்ந்த
புண்ணியன்; விண்ணவர்க்கு இறையே

பொழிப்புரை :- என்ன காரணம் என்று எனக்குத் தெரியவில்லை. எளியேனுடைய கல் போன்ற வலிய மனத்தை உருக்கி, கச்சணிந்த தனத்தையுடைய ஒப்பனைத் தாயோடு இளைய விடையின் மீது எழுந்தருளி, திருமாலும் அறியாத திருவுருவத்தை எனக்குக் காட்டி, நல்லருள் பாலித்து எனக்கு வாழ்வு தந்தான்; முழுமையானவனும் திருக்கருவையில் களா மரத்தின் நிழலில் அமர்ந்து அருளிய புண்ணியனும் ஆகிய தேவதேவன்.

"கல்லைப் பிசைந்து கனியாக்கி" என்பது திருவாசகம்.

18. விண்ணவர் மகுட கோடிவீழ்ந்து இறைஞ்சும்
விரைமலர்ச் சேவடி மிசையே
உள்நிறை காதல் அன்புநின்று உருக
உலையிடும் மெழுகென உருகிக்
கண்ணில்நீர் வார, கருவையம் பரனே!
கடவுளே! என்றெடுத்து ஏத்தப்
புண்ணியம் புரிந்தேன்! இப்பெரும் பேறு
பூதலத்து எவர்பெறு வாரே.

பொழிப்புரை :- தேவர்கள் கோடி மகுடங்களைத் தாழ்த்தி வழிபடுகின்ற, மணம் நிறைந்த மலர் போன்ற செவ்விய திருவடியின் மீது, உள்ளத்தில் நிறைந்த பேரன்பு நின்று உருக, உலையிற்பட்ட மெழுகு போலக் கசிந்து, கண்கள் நீரைக் கொட்ட, 'கருவை எம் பெருமானே!' கடவுளே என்று எடுத்துப் போற்றப் புண்ணியம் செய்தேன். யான் பெற்ற இப் பெருந் தவப் பேறு பூவுலகத்தில் வேறு எவரே பெற்றார்?

19. பெறுவது நினது திருவடிக் கமலம்,
பேசுவது உன்திரு நாமம்;
உறுவது நினது திருஉரு வெளியாம்;
உணர்வதுஉன் அருள்;அலாது உண்டோ!
மறுஅறு சிறப்பின் மாசுஇலா மணியே!
வரதனே! சிவபெரு மானே!
குறுமுனி பரவக் களாநிழல் அமர்ந்த
கொடிமதில் கருவையா திபனே!

பொழிப்புரை :- அடைவது உன் திருவடித் தாமரைகள்; புகழ்வது உன் திருப் பெயர்கள்; பொருந்துவது உன் திருவுருவாகிய சிதாகாசம்; உணர்வது உன் கருணை; இவற்றையல்லால் வேறு உண்டோ? (இல்லை என்பது தேற்றம்) குற்றமற்ற பெருமையை உடைய பழுது இல்லாத மாணிக்கமே! வரம் தருபவனே! சிவபெருமானே! குறுமுனி என்னும் தமிழ் அகத்தியன் பாராட்டக் களா மரத்தின் நீழலில் வீற்றிருந்து அருளுகின்ற, கொடி பறக்கும் கருவாபுரிக்குத் தலைவனே!

',ஈசனே! மாசுஇலாமணியே'' எனபது திருவாசகம்

20. ஆதவன், மதி,பார், அனல்,வெளி, புனல்,கால்
அருமறை எச்சன்என்று, எட்டுப்
பேதமாம் உருவாய் அருவமாய் நிறைந்த
பெற்றியால் உற்றுநான் உன்னை
ஏதினுல் உணர்வேன்! உணருமாறு அருளாய்;
இளநிலாப் பசுங்கொழுந்து அணிந்த
சோதியே! கருவை ஒப்பனை களபத்
துணைமுலை தழுவுகா தலனே!

பொழிப்புரை :- சூரியன், சந்திரன், உலகம், நெருப்பு, வானம், நீர், காற்று, அரிய வேதங்கள் புகழும் உயிர் என்று சொல்லும் எட்டு விதமான வேறுபாடாகவும், உருவமற்றவனுகவும் நிறைந்துள்ள பெருமையால் உன்னை அடைந்த நான், ஏதென்று சொல்லி வணங்குவேன். யான் உணர்ந்து கொள்ளுமாறு அருளுவாயாக இளநிலவு பொழியும் பசுமையான மதிக்கொழுந்து சூடிய ஒளி வடிவினனே! கருவாபுரியில் ஒப்பனைத் தேவியின் மணச் சாந்து அணிந்த இரண்டு தனங்களையும் தழுவுகின்ற காதல் உடையவனே!

## மூன்றும் பத்து

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

21. காதல் உற்றிட மனநிலை பெற்றிடக்
கனிந்திடக் களிகூரப்
போதம் உற்றிட யான்எனது என்றிடும்
புலைச்செருக்கு அறமாற
"நாதன் முத்தமிழ்க் கருவையம் பரன்"என
நாத்தழும்பு உறஓதி
ஓதி மற்றுநான் பெற்றதை இற்றென
உரைத்திட முடியாதே.

பொழிப்புரை :- உன் மீது அன்பு பொருந்தவும், மனம் நிலைபெற்று நிற்கவும், கனிவு பெறவும், களிப்பு மிகவும், அறிவு பெருகவும், யான் எனது என்று சொல்லும் இழிந்த அகங்காரம் முழுதும் மாறவும், 'நாதனே!' என்றும் 'முத்தமிழ் முழங்கும் கருவைப் பெருமானே'! என்றும் நாக்குத் தடிப்புப் பெறச் சொல்லிச் சொல்லி நான் பெற்ற இன்பத்தை இத்தன்மைத்து என இயம்ப முடியாது.

"யான் எனதுஎன்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்". என்பது குறள்.

22. முடிக டந்தது ககனகோ ளகைநெடு
முகட்டினுக்கு அப்பாலும்;
அடிக டந்தது பாதலம் ஏழினுக்கு
அப்புறத்து; அனலோடும்
துடிகள் தந்த,கை கடந்தன திகந்தமால்;
தொல்புகழ்க் களாஈசன்
பொடிகள் தந்தபால் மேனியன் திருநடம்
புகலுதற்கு எளிதாமோ!

பொழிப்புரை :- திருமுடி வானுலக முகட்டுக்கு அப்பாலும் சென்றது; திருவடி கீழுலகம் ஏழையும் கடந்து சென்றது; தீயாடுகின்ற, உடுக்கு ஏந்திய கைகள் திக்குகள் அனைத்தையும் ஊடுருவிச் சென்றன. பழம் புகழ் வாய்ந்தவனாகிய களா ஈசனும் திருநீறுபூசிய பால் வண்ணனது திருநடனம் சொல்லுதற்கு எளிமை ஆனதா?

'பாதாளம் ஏழினும் கீழ்' என்ற திருவாசகப் பாடலை இது ஒக்கும்.

பால்வண்ணநாதன் - கருவாபுரியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருப் பெயர்.

23. எளியன், புன்தொழில் பாதகன், மாதரார்
இளமுலை வளம்வேட்ட
களியன், தீக்குண வஞ்சகன் நெஞ்செனும்
கருங்கலைக் கரைவித்து,
வெளியில் வந்துநின் பொன்னடி சென்னியின்
மிலைந்துஎனை ஆட்கொண்ட
அளிக னிந்தநின் அருட்குணம் உரைப்பர்ஆர்,
அருங்களா அமர்ந்தோனே!

பொழிப்புரை :- ஏழ்மை உடையவனும், இழிதொழில் செய்கின்ற பாவியும், மகளிருடைய இளமை வாய்ந்த தனங்களின் இன்பத்தை விரும்பிக் களிப்பவனும், கொடிய குணமுடைய வஞ்சகனும் ஆகிய என் நெஞ்சென்னும் கருங்கல்லைக் கரையச் செய்து, வெளிப்பட்டுவந்து, உன் பொன்ஞர் திருவடியை என் சென்னியில் வைத்து, என்னை ஆட்கொண்டு அருளிய அருள் பழுத்த உன் திருவருட் குணத்தை யாரே எடுத்து உரைக்க வல்லார். அருமையான களா நீழலில் அமர்ந்த கடவுளே!

24. அமரர் மாதவர் முனிவரர் திரண்டுநின்று
அனுதினம் தொழுதுஏத்தும்
தமர நூபுரப் பொன்சரண் ஏத்திடத்
தமியனுக்கு அருள்செய்தான்;
குமர னல்அரும் சூர்ப்பகை தடிந்தவன்,
கொள்ளைவண் டினம்ஆர்க்கும்
கமல வாவியும் பொங்கரும் சூழ்திருக்
கருவைஎம் பெருமானே.

பொழிப்புரை :- தேவர்கள், சிறந்த தவத்தோர், முனிவர்கள் யாவரும் கூடி நின்று நாள்தோறும் பரவி ஏத்தும் ஒலிக்கும் பொன் சிலம்பு அணிந்த திருவடிகளைப் போற்ற, அடியேனுக்கு அருள் சுரந்தான், குமரக் கடவுளைக் கொண்டு அரிய சூரனது பகையை அறுத்தவன் ஆகிய வண்டுக் கூட்டங்கள் ஒலிக்கின்ற தாமரைத் தடாகமும் சோலையும் சூழ்ந்த திருக்கருவையில் எழுந்தருளியிருக்கின்ற எம்மான்.

25. கருவை யம்பரன், அம்பர மேனியன்,
கடவுளர் காணுத
உருவை அம்பிகை பெறப்பகுந்து அளித்தவன,
ஒன்னலர் புரம்நீற்றும்
பெரு,வை அம்புளனக் கண்ணனை உடையன்,என்
பிழைபொறுத்து அழியாத
திருவை அம்புவிச் சிறப்பொடும் அளித்தவன்
திருக்களா உடையோனே.

பொழிப்புரை :– திருக் கருவையில் எழுந்தருளிய பரமன், சிதாகாசத்தை உடம்பாக உடையவன்; தேவர்களும் காண முடியாத உடம்பைத் தேவி பெறுமாறு பகிர்ந்து அளித்தவன்; மாற்ருரது முப்புரத்தை நீறு ஆக்கும் பெரிய கூரிய கணையாகத் திருமாலைக் கொண்டவன்; யான் செய்ததவறுகளை எல்லாம் பொறுத்து அழியாத சிவஞானச் செல்வத்தை, இவ்வுலகச் செல்வத்தோடு எனக்கு ஈந்தவன்; அவனே திருக்களா நீழலில் அமர்ந்தவன்.

வை: கூர்மை.

26. உடையர் என்றுதம் மக்களை மனைவியை
ஒக்கலைப் பெருவாழ்வை
அடைய நல்குசீர்ச் செழும்பொருள் முதலிய
அனைத்தையும் நினைப்பாரோ?
விடையின் மேல்வரு திருக்களா நாயகன்
விரைமலர்ச் செழுங்கொன்றைத்
தொடையல் வேணியான் அடியவர்க்கு அன்பொடு
தொண்டுசெய் மனத்தாரே.

பொழிப்புரை :- தம் மக்களை. மனைவியை, சுற்றத்தை, பெரிய வாழ்க்கையை எல்லாம் தருகின்ற சிறந்த செழும் பொருள் முதலிய யாவற்றையும் நாம் உடையோம் என்று எண்ணுவார்களா? விடையின் மீது இவர்ந்து வரும் திருக்களா ஈசன் ஆகிய மணம் உள்ள செழுமையான கொன்றை மலர் மாலையணிந்த சடையையுடைய சிவபெருமானின் அடியவர்க்கு அன்புடன் ஏவல் புரியும் உள்ளத்தை உடையவர்.

சிவனடியார்க்கு அடியார் உலக வாழ்வை மதியார் என்பது கருத்து.

27. மனத்தை யான்தினம் வணங்குவன், மின்னென்
வைகலும் நிலைஅற்ற
தனத்தை வாழ்வினை நிலைஎன் மதித்துஉழல்
ஆசையில் தளராதே,
புனத்து ழாய்முகில் போற்றிடும் கருவைவாழ்
புண்ணியன், பாலற்காச்
சினத்த காலனை உதைத்தவன், பங்கயச்
சேவடி வணங்குஎன்றே.

பொழிப்புரை:- மனத்தை நாளும் நான் கும்பிடுவேன்; நாள்தோறும் மின்னலைப்போல் மறையும் நிலையற்ற செல்வத்தை, வாழ்க்கையை நிலை என எண்ணிச் சுழல்கின்ற ஆசையால் சோர்வுறாமல், முல்லை நிலத்தில் தோன்றும் துழாய் மாலையை அணிந்த திருமாலும் வணங்கும் கருவாபுரியில் வாழ்கின்ற புண்ணியனும், மார்க்கண்டனுக்காகக் கோபித்த எமனை உதைத்து அருளியவனும் ஆகிய காலகாலனின் செங்கமலத் திருவடியை வணங்குவாயாக என்று.

வணங்கென்று வணங்குவன் என இயைக்க. ''பேயா உழலும் சிறுமனமே'' என்ற பாரதியின் பாடல் இதனோடு ஒப்பது

"புனத் துழாய் மாலையானே" என்பர் தொண்டர் அடிப்பொடி.

28. வணங்குஎ னத்தலை அளித்தனை; நின்புகழ்
வாழ்த்துஎன நாத்தந்தாய்;
இணங்குஎ னத்திருக் கூட்டமும் காட்டினை;
இனிப்பெறும் பேறுண்டோ?
துணங்கை இட்டுவெம் பேய்க்கணம் குதித்திடச்
சுடலைஆடு அரங்காகக்
கணங்கள் போற்றநின்று ஆடிய குழகனே!
கருவையெம் பெருமானே!

பொழிப்புரை - உன்னை வணங்குதற்குத் தலையை அளித்தாய்; உன் புகழ்பாட நாவை ஈந்தாய்; நான் இணங்கிப் பேறுபெற உன் அடியார் திருக்கூட்டத்தைக் காட்டி அருளினாய்; நான் இனிப் பெறும் பேறு என்ன இருக்கிறது? துணங்கை என்னும் கூத்தைப் பேய்க்கூட்டங்கள் குதித்தாடச் சுடுகாட்டை அரங்கமாகக் கொண்டு சிவகணங்கள் பாராட்டி நின்று ஆடும் அழகனே! கருவைத் தலைவனே!

'வணங்கத் தலைவைத்து' என்ற திருவாசகத்தின் முற்பகுதியின் சொல்லும் பொருளும் இப்பாடலில் அப்படியே எடுத்தாளப் பெற்றிருக்கின்றன.

'வாழ்த்த வாயும்' என்ற அப்பர் சுவாமிகள் தேவாரமும் ஈண்டு நினைக்கத்தக்கது.

29. பெருமை சான்றநின் திருஎழுக்கு ஐங்கமே
பெரும்புணை எனப்பற்றி,
அருமை சான்றஇப் பவக்கடல் கடக்குமாறு
ஆசையில் துணிகின்றேன்;
இருமை இன்பமும் அடியவர்க்கு ஊட்டிடும்
இறைவனே! எம்மானே!
தரும மூர்த்தியே! ஒப்பனை வனமுலை
தழுவுதிண் புயத்தானே!

பொழிப்புரை:- சிறப்பு நிறைந்த உன்னுடைய திரு எழுத்து ஐந்தையுமே பெரிய தெப்பமாகப் பிடித்துக்கொண்டு அருமை மல்கிய இப் பிறவிக்கடலைக் கடப்பதற்கு ஆசையால் துணிவு பெறுகின்றேன். இம்மை மறுமை ஆகிய இருமை இன்பத்தையும் அடியார்கட்குப் புகட்டும் தலைவனே! எம்பெருமானே! அறத்தின் வடிவமே! ஒப்பனை அம்மையின் அழகிய தனங்களைத் தழுவுகின்ற வலிய தோள்களை உடையவனே!

"அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை" என்பது திருவாசகம்.

30. தானை எண்திசை; முக்கணும் முச்சுடர்;
தழைசடை கதிர்க்கற்றை;
மேனி வெங்கனல்; ஆடுஇடம் உலகெலாம்
வெந்துஒழி புறங்காடு;
சேனை வெங்கொலைப் பேய்க்கணம்; என்னின்,அத்
திருக்களா அமர்ந்தோனை
வான நாடரும் பூதலத்து அடியரும்
வணங்குவது எவ்வாறே!

பொழிப்புரை:- ஆடை திக்குகள் எட்டும், மூன்று கண்களும் இரவி, மதி, தீ என்ற மூன்று சுடர்களும், தழைத்திருக்கும் சடை இரவியின் கதிர்த்தொகுதி, உடம்பு கொடிய அனல், ஆடுகின்ற இடம் உலகம் முழுதும் வெந்து ஒழிகின்ற சுடுகாடு, சேனைகள் கொடிய கொலைத் தொழில் வல்ல பேய்க்கூட்டங்கள் என்றால், இத்தகைய அந்தத் திருக்களா நிழலில் அமர்ந்த இறைவனை விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் போற்றுவது எதுபற்றி?

## நான்காம் பத்து

*கலிவிருத்தம்*

31. எவ்வம் உற்ற திரிமலம் இற்றது;
செவ்வி ஞானத் திருக்கண் திறந்தது;
கொவ்வை வாய்உமை கொண்கன் கருவையான்
பௌவ நஞ்சம்உண் டான்கழல் பாடவே.

பொழிப்புரை :- குற்றம் பொருந்திய ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்று மலங்களும் அழிந்தன. செம்மையுள்ள அறிவுக்கண் திறந்தது. கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயையுடைய உமையாள் கணவனுன கருவாபுரியில் எழுந்தருளி இருக்கின்ற, கடல் நஞ்சை உண்ட சிவபெருமானின் திருவடிகளைப் புகழ்ந்து பாடியமையால்.

எவ்வம் – குற்றம். திரிமலம் – மும்மலம். கொண்கன் – கணவன். பௌவம் – கடல்.

32. பாடி னேன்புகழ்; பங்கயச் சேவடி
சூடி னேன்;கரு வாபுரிச் சோதியை,
நாடி னேன்அவன் நான்எனும் வேறுஅற;
கூடி னேன்அடி யார்திருக் கூட்டமே.

பொழிப்புரை :- கருவாபுரி இறைவன் புகழைப் பாடினேன். அவன் தாமரைச் சேவடிகளைத் தலையில் அணிந்து கொண்டேன். அவ் ஒளி மயமானவனை, நான் அவன் என்னும் வேறுபாடின்றி அடைந்தேன். அவன் அடியார் திருக் கூட்டத்தோடு கலந்தேன்.

33. கூட்டம் இட்ட கருவி குலைந்திடச்
சேட்டை அற்றுஉள் அறிவு சிதையுமுன்,
நாட்டம் மூன்றுடை நாதன் முகலிங்கன்
தாள்து ணைக்கம லம்தலைக் கொள்மினே.

பொழிப்புரை :- கூட்டமாகக் கூடிய கருவிகள் ஆகிய ஐம்புலன்களும் அழிந்து, செயலிழந்து, உள் அறிவு குலையும் முன்னதாக, மூன்று கண் படைத்த தலைவன் ஆகிய முகலிங்கனின் இரண்டு திருவடித் தாமரைகளையும் தலைமீது தாங்குங்கள்.

நாட்டம் - கண். முகலிங்கன் – கருவை ஆண்டவனின் பெயர்

34. தலைக்கொள் வெண்தலை மாலையன், தண்நிலா
மிலைக்கும் தென்கரு வாபுரி வேதியன்,
புலைக்கு ரம்பை உடம்பில் குடிபுகுந்து
அலைக்கும் நெஞ்சம் ஒழித்துஎனை ஆள்வனே.

பொழிப்புரை :- தலையின் மீது பிரமன் முதலியோரது வெள்ளிய தலை ஓடுகளை மாலையாக அணிந்தவன்; குளிர்ந்த திங்கள் சூடிய, சடையை உடைய தென்தமிழ் நாட்டிலுள்ள கருவாபுரிக்கு இறைவனாகிய அந்தணன், இழிந்த குடிலான என் உடம்பில் குடியேறி அலைக்கழிக்கும் என் நெஞ்சத்தை ஒழித்து என்னை அடிமை கொள்வான்.

'தலைமாலை தலைக்கு அணிந்து' என்பார் அப்பர் சுவாமிகள்.

35. என்னை ஆள்பவன்; என்உள் இருப்பவன்;
தன்னை யான்தொழத் தண்அளி தந்தவன்;
பொன்னை ஆளும் புயன்தொழ நின்றவன்;
கன்னி பாகன்; கருவைக்கு இறைவனே.

பொழிப்புரை :- என்னை ஆட்கொண்டவன்; என் உள்ளத்துள்ளே வீற்றிருப்பவன; அவனை யான் வணங்கக் குளிர்ந்த அருள் ஈந்தவன்; திருமகளை ஆளுகின்ற தோளையுடைய திருமால் வணங்க நின்றவன்; அம்பிகையைப் பக்கத்திலே உடையவன்; கருவாபுரிக்குத் தலைவன்.

பொன் – திருமகள். புயன் – தோளையுடையவன். கன்னி - அம்பிகை. அவள் உலகத்தை எல்லாம் ஈன்றும் கன்னியாகவே இருக்கின்றாள் "உலகுயிர் எல்லாம் ஈன்றும் பால்மொழி கன்னியாகும்" என்பது சிவஞான சித்தியார்.

36. இறைவன்; எங்கணும் யாவையும் ஆனவன்;
பிறைய ணிந்த சடிலன்; பெருந்தகை;
கறையி லங்கு மிடற்றன்; கருவையான்;
மறைய நின்றுஎனை ஆண்டதுஎம் மாயமே.

பொழிப்புரை :- தலைவன்; எல்லா இடத்தும் எல்லாப் பொருளும் ஆனவன்; இளந்திங்கள் அணிந்த சடையை உடையவன்; பெருந்தன்மை உடையவன்; நஞ்சு தங்கிய கழுத்தன்; கருவாபுரியில் எழுந்தருளியவன். அவன் மறைவாக நின்று என்னை ஆட்கொண்டது என்ன வித்தை!

சடிலம் – சடை. கறை - நஞ்சு. மிடறு – கழுத்து.

37. மாய வல்இருள் நீங்க மனத்திடைத்
தூய ஞானச் சுடர்விளக்கு ஏற்றிய
நாய கன்;கள வீசன்; நரைமயிர்
பாய மால்விடை யான்;பர மேட்டியே.

பொழிப்புரை :- மாயமாகிய வன்மைமிக்க இருள் கெட, உள்ளத்திலே புனிதமான அறிவு ஒளிவிளக்கை ஏற்றிவைத்த தலைவன்; களாநீழல் அமர்ந்த கடவுள்; வெண்மை நிறமான மயிர் பரவிய பெரிய இடபத்தை உடையவனாகிய சிவபெருமான். பாய – பரவிய. பரமேட்டி – சிவபெருமான்.

38. பரம்எ னக்குஉனை யன்றிஓர் பற்றிலேன்;
சரமம் முற்றிய போதில் தருவையோ;
கருவை நிற்கும் களாமுத லே!மறைச்
சிரம்இ ருக்கும் திருவடிச் செல்வமே.

பொழிப்புரை :- எனக்குப் பாரமாக உன்னை அன்றி ஒரு பிடிப்பு இல்லேன்; கருவாபுரியில் எழுந்து அருளியிருக்கும் களாநீழல் அமர்ந்த முதல்வனே! வேதத்தின் உச்சியிலிருக்கும் உன் திருவடிச் செல்வத்தை என் வாழ்நாள் முடியும் போது தந்தருளுவாயா? சரமம் - அந்தியகாலம்.

"வேதமுடிமேல் ஆனந்த உருவாய் நிறைந்து விளையாடும் மாதர் அரசே" என்பர் பரஞ்சோதி மா முனிவர்.

39. செல்வம் ஈயும்; சிறப்பும் அளித்துஉளத்து
அல்லல் தீர்க்கும்; அறிவை உதவிடும்;
கல்வி நல்கும்; கதிதரும்; பொற்கிரி
வல்வி லான்கள வீசனை வாழ்த்தவே.

பொழிப்புரை :- செல்வத்தைத் தரும்; ஏனைய சிறப்பையும் தந்து துயரத்தைத் தீர்க்கும்; அறிவைத் தந்திடும்; கல்வியை அளிக்கும்; வீட்டின்பத்தையும் நல்கும்; தங்கமலையை வலிய வில்லாகக் கொண்ட களாநீழல் அமர்ந்த கடவுளை வாழ்த்தினால். 'குலந்தரும்' என்னும் திருமங்கை மன்னன் பாசுரம் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

40. வாழ்வை நம்பி, மதிகெட்டுக் கும்பியில்
வீழ்புன் மாந்தர்க்கு உறுதி விளம்புவேன்;
தாழ்ச டைக்கள வீசன்தன் ஆலயம்
சூழ்தல்; சூழில் துறக்கம் கிடைக்குமே.

பொழிப்புரை :- வாழ்க்கையைப் பொருட்டாக நம்பி, புத்திகெட்டு, நரகத்தில் வீழும் புல்லிய மனிதர்களுக்கு ஓர் உறுதியை நான் எடுத்துச் சொல்லுவேன்; அது யாதெனில், தாழ்ந்த சடையை உடைய களாநீழல் அமர்ந்த கடவுளின் திருக்கோயிலை வலம் வருதல். அப்படி வலம் வந்தால் வீடுபேறு கிட்டும். கும்பி – நரகம்; துறக்கம் – வீடு.

*கொச்சகக் கலிப்பா*

41. கிடைத்தபொருள் கரத்துஇருக்கக்
கிடைத்திலதுஎன்று அயர்வார்போல்
படைத்தநினது அருள்பெற்றும்
பெற்றிலர்போல் பரிவுஉற்றேன்;
முடைத்தலையில் பலிகொள்ளும்
முகலிங்கா! முகிழ்த்தநிலாச்
சடைத்தலையாய்! நின்மாயம்
யான்உணரும் தரத்ததோ?

பொழிப்புரை :- சேர்ந்த பொருள் கையிலிருக்க, அதனை மறந்து கிடைக்க இல்லையே என்று தளர்பவர்களைப் போல, என்னைப் படைத்த உன்னருளை யான் பெற்றிருந்தும், பெருதவர்களைப் போல வருந்துகின்றேன். முடை நாற்றமுடைய தலையிலே பிச்சை ஏற்கும் முகலிங்கா! அரும்பிய திங்களைச் சடையிற் சூடியவனே! உன்னுடைய மாய வித்தையை யான் உணர முடியுமா?

42. உணராத நின்நிலையை,
நீஉணர்த்த உணர்ந்ததற்பின்
புணராத தாள்தலையிற்
புணர்ந்ததுஎனப் புளகுஓங்கத்
தணவாமல் எனைஉனக்குத்
தந்துஉருகி இரண்டற்றேன்;
பணராசச் சிலம்புஅணிந்த
பழமறைஎம் பெருமானே!

பொழிப்புரை :- உணர முடியாத நின் பெருமையை நீயே எனக்கு உணர்த்த நான் அறிந்து கொண்ட பின்னர், சேர்தற்கரிய உன் திருவடி என் தலையில் சேர்ந்தவா எண்ணிப் புளகாங்கிதம் அடைந்து, நீக்கமற எனை உனக்குத் தந்து மனம் கசிந்து இரண்டு என்ற நிலை அற்று உன்னுடன் ஒன்றினேன். அரவு அரசனைச் சிலம்பாக அணிந்த பழமறைகள் பாராட்டும் எம் தலைவனே!

'அவனருளாலே அவன் தாள் வணங்கியே' என்பது திருவாசகம். தாள்தலை என்பது தாடலை எனப் புணருமாப் போல இறைவனுடைய தாளும் நம்முடைய தலையும் சேருதல் வேண்டும்.

பணம் - பாம்பு.

43. பழமையாம் வாதனையில்
படிந்தமனப் பந்தத்தின்
விழைவினால் தலைமயங்கி,
வேறுவேறு உருவெடுத்துச்
சுழல்குயவன் திகிரியைப்போல்
பவக்கடலில் சுழல்வேனோ?
மழவிடையாய்! பால்வண்ணா!
வானவர்தம் கோமானே!

பொழிப்புரை :- பழமையாகிப துன்பத்தில் அழுந்திய மனப்பற்றின் ஆசையால் மயக்கம் அடைந்து, வெவ்வேறு வடிவெடுத்துப் பிறந்து பிறந்து, குயவன் சுற்றும் சக்கரத்தைப் போலப் பிறவிக் கடலில் உழலக் கடவேனோ? இளமை தங்கிய விடையை உடையவனே! பால்வண்ணா! தேவர்கள் தலைவனே!

வாதனை – துன்பம். பந்தம் – கட்டு. விழைவு - ஆசை. திகிரி – சக்கரம். பவம் – பிறவி.

44. 'கோமானே! கருவைவரும்
குணக்குன்றே! மலர்இதழித்
தேமாலை புனைந்தசடைச்
செழுஞ்சுடரே!' என்றென்று
பாமாலை வாய்பாடி,
கைகொட்டி, பதம்பெயர்த்து
நாம்ஆட வம்மின்காள்
தொண்டராய், நமரங்காள்!

பொழிப்புரை :- "இறைவனே! கருவையில் எழுந்து அருளியுள்ள குணமலையே! தேன் பொருந்திய கொன்றை மலர்மாலை அணிந்த சடையுடைச் செழுச் சோதியே!" என்றென்று சொல்லி, வாயினால் பாமாலை பாடிக் கைகளைக் கொட்டிக் கால்களைத் தூக்கி அடியார்களாக நின்று கூத்தாட வாருங்கள்; தொண்டர்களே!

இதழி : கொன்றை. தேம் – தேன்.

45. தொண்டுசெய்து வழிபட்டுச்
சுருதிபுகழ் களாவீசன்
புண்டரிக மலர்த்தாளைப்
போற்றிமுதற் பேறுபெற்றார்,
அண்டர்பிரான் நான்முகத்தோன்
ஆழியான் இவர்என்றால்
மண்திணிஞா லத்துஎளிய
மானுடரோ வழுத்துவார்!

பொழிப்புரை :- பணி செய்து, கும்பிட்டு மறைகள் புகழுகின்ற களா நீழல் அமர்ந்த கடவுளின் தாமரை புரையும் காமர் சேவடிகளை வணங்கி, முன்னே பயன் அடைந்தவர்கள் தேவர்கள் தலைவனாகிய இந்திரனும், நான்கு முகங்களை உடைய பிரமனும், சக்கரம் ஏந்திய திருமாலும் ஆகிய இவர்கள் என்றால், இந் நிலவுலகத்திலுள்ள எளிய மனிதரோ அவன்புகழ் பாட வல்லார்!

சுருதி – வேதம். புண்டரிகம் – தாமரை. அண்டர் – தேவர். ஆழி – சக்கரம்; திருப்பாற் கடலும் ஆம். மண் திணி ஞாலம் – மண் பொருந்திய நிலவுலகம்.

46. வழுத்திடுவேன் நாவார;
மலரிடுவேன் கரங்கொண்டு;
தொழத்தகுவேன் முடிதாழ்த்தி;
சூழ்வருவேன் துணைத்தாளால்;
அழுத்திடுவேன் மனத்துஉன்னை;
அகம்புறம்ஒன் றாய்உருகிப்
பழித்திடுவேன் அருள்கனிய;
பால்வண்ணா! நம்பரனே!

பொழிப்புரை :- வாயார வாழ்த்துவேன்; கை கொண்டு பூத் தூவுவேன்; தலை சாய்த்து வணங்குவேன்; இரண்டு கால்களாலும் வலம் வருவேன்; உள்ளத்தில் உன்னைப் பதித்துக் கொள்வேன்; உள்ளும் வெளியும் ஒன்றுபட்டுக் கசிந்து நீ அருள் சுரக்க, உன்னை வணங்குவேன்; பால்வண்ண நாதார! எம் தலைவனே!

துணை – இரண்டு. பழித்திடுதல் – துதித்தல்.

47. நம்பியுனது அருள்வேட்டு
நடுக்கடலுள் கலம்கவிழ்த்து
வெம்புதுயர் மனத்தார்போல்
மெலிகின்றேன் நெடுநாளா;
கும்பமுனிக்கு அருள்புரியும்
கொற்றவனே! முகலிங்கா!
தும்பைமுடித் தோய்!புரக்க
இரக்கம்இன்னம் தோன்றுதோ!

பொழிப்புரை :- கடல் நடுவிலே கப்பலைக் கவிழ்த்துவிட்டு உன்னை நம்பி உனது அருளை விரும்பி அதனைப் பெற விழைகின்ற வெதும்பும் துயருடைய உள்ளத்தவரைப் போல நெடுநாளா நான் தளர்கின்றேன். அகத்திய முனிவனுக்குக் கருணை சுரந்த வெற்றியை உடையவனே! முகலிங்கா! தும்பை மாலையை முடியில் அணிந்தவனே! எனைக் காக்க இன்னும் இரக்கம் தோன்றவில்லையா!

வேட்டு - விரும்பி. கலம் - கப்பல்.

48. தோன்றியபோது உடன்தோன்றித்
தோன்றுது மறைத்துஎன்னை
ஆன்றசெழும் செம்பில்உறை
களிம்புபோல் அகலாமல்
ஊன்றுமலத் துகள்அகற்றி
உன்அருளும் பெறுவேனே?
மூன்றுலகும் தொழுதேத்தும்
முகலிங்கா! முதற்பொருளே!

பொழிப்புரை :- யான் பிறந்தபோது பொருந்திய செழுமையான செம்பில் உறைகின்ற களிம்புபோல என்னுடன் தோன்றி, யான் தோன்றுமல் என்னை மறைத்து, என்னை விட்டு நீங்காமல் பொருந்தி இருக்கின்ற அழுக்கைக் களைந்து, உன் கருணைக்கு உரியவன் ஆவேனு? இவ்வுலகம், கீழுலகம், மேலுலகம் ஆகிய மூன்றுலகங்களும் போற்றித் துதிக்கும் முகலிங்கா! முழுமுதற் பொருளே!

49. பொருள்வேட்டும் நிலம்வேட்டும்
பூவையர்தம் புணர்கலவி
மருள்வேட்டும் நாள்தோறும்
மனவலிகெட்டு அயர்கின்றேன்;
அருள்வேட்டுஉன் சந்நிதிப்பட்டு
அருந்துயர்போய் உய்வேனோ?
தெருள்வேட்டார்க்கு அருள்புரியும்
திருக்களவில் உறைவோனே.

பொழிப்புரை :- பொன்னை விருப்பியும் புவியை விரும்பியும் பூவையரோடு சேருகின்ற கலவி மயக்கத்தை விரும்பியும் நாள்தோறும் உள்ளத்தின் ஆற்றல் கெட்டு வருந்துகின்றேன்; உன் திருவருளை விரும்பி, உன் சந்நிதியை அடைந்து, நீங்கரும் பிறவித் துயரை நீக்கி, நான் கடைத்தேறுவேனோ? அறிவை விழைவோர்க்கு அருள் சுரக்கும் திருக்களா நீழலில் அமர்ந்த கடவுளே!

பொருள் – நிலம் – பூவையர் புணர்கலவி - பொன்னாசை, மண்ணாசை, பெண்ணாசை ஆகிய மூன்று.

50. உறைவாய்நன் மனத்துஅன்பர்
உடல்தோறும் உயிராகி;
நிறைவாய்எவ் உலகனைத்தும்
நீக்கமிலாது உணர்ந்தோர்க்கு;
மறைவாய்,உய்த்து உணராார்க்கு;
மறைபயிலும் கருவையில்வாழ்
இறைவா! நின் திருவிளையாட்டு
யான்வழுத்த அடங்காதே.

பொழிப்புரை :- நல்ல உள்ளத்தோடு கூடிய அன்பர்தம் உடம்பெல்லாம் உயிராகித் தங்குவாய்; எல்லா உலகத்திலும் இடையீடின்றி உன்னை உணர்ந்தோர்க்கு நிறைந்து நிற்பாய்; உன்னை ஆய்ந்து அறியாதார்க்கு மறைந்து விடுவாய்; வேதங்கள் முழங்கும் கருவாபுரியில் வாழும் தலைவா! உன் திருவிளையாட்டு யான் சொல்ல அடங்குமா?

## ஆறும் பத்து

*எழுசீர் ஆசிரிய விருத்தம்*

51. காதற்பெ ருக்கும் ஒருகோடி கோடி
கவலைப்பெ ருக்கும் மிகலாய்
வாதைப்ப டுத்த அலைமாறு போல
மனமால் உழன்று விடவோ!
வேதப்பெ ருக்கும் முழவோசை விம்மு
விழவிற்பெ ருக்கும் இயல்கூர்
நாதப்பெ ருக்கும் ஒழியாது மல்கு
கருவேச! ஞான உருவே.

பொழிப்புரை:- ஒருகோடி ஆசைப் பெருக்கமும், ஒருகோடி கவலை மிகுதியும் மேம்பட்டு, கடலலை மாறிமாறி வருவதுபோல என்னைத் துன்புறுத்த, மனமயக்கத்தில் சுழன்று விடுமாறு விட்டுவிடுவாயா! மறை ஒலியின் பெருக்கமும், இசைக் கருவிகள் பெருக ஒலிக்க நடைபெறும் திருவிழாவின் ஒலி மிகுதியும், இலக்கணம் அமைந்த குழல்ஒலி, யாழ் ஒலிகளின் பெருக்கமும் நீங்காது நிறைந்திருக்கும் திருக்கருவை இறைவனே! அறிவின் திருவுருவே!

52. உருவாகி நிற்றி; அருவாகி நிற்றி;
உயிரோடுஎ வைக்கும் உறவாய்,
மருவாகி நிற்றி; மலராகி நிற்றி;
மறையாகி நிற்றி; மறையின்
பொருளாகி நிற்றி; உனையான்அ றிந்து
புகழ்கின்ற வாறும் அறியேன்;
கருவாபு ரிக்குள் உறைதேவ தேவ!
கதியேதுஎ னக்கு மொழியே.

பொழிப்புரை:- உருவமாக நிற்கின்றாய்; உருவமற்ற தன்மையாகியும் நிற்கின்றாய்; உயிர்ப்பொருள்களோடு எல்லாப் பொருள்களுக்கும் உறவாகி, மணமாகவும் பூவாகவும நிற்கின்றாய்; வேதங்களின் பொருளாகவும் நிற்கின்றாய்; உன்னை நான் நன்கு அறிந்து புகழ்கின்ற முறை எனக்குத் தெரியவில்லை. கருவாபுரியில் எழுந்து அருளியிருக்கின்ற கடவுள்கட்கெல்லாம் தலைவனே! எனக்குத் துணையேது? அருள்புரிவாயாக.

53. மொழிகின்ற ஆறு சமயங்கள் தோறும்
முழுதும்சு ழன்று நிலையற்று
அழிகின்ற சிந்தை அவலங்கெ டுத்துஉன்
அடிகண்டு நாடி யறியும்
விழியும்கொ டுத்த முகலிங்க நாத!
மிகும்அன்பர் தேடு பொருளே!
பொழியும்க டைக்கண் அருளால்அ ளித்தி
புரையற்ற முத்தி நிலையே.

பொழிப்புரை:- சொல்லப்படுகின்ற ஆறுவகைச் சமயங்களிலும் முழுதும் அலைந்து, ஒரு நிலையின்றி அழியா நிற்கும் உள்ளத்துயரைத் தொலைத்ததோடு, உன் திருவடியைத் தேடியறியும் கண்ணையும் எனக்கு அருளிய முகலிங்கப் பெருமானே! பேரன்பர்கள் தேடிக் கண்டுகொண்ட பொருளே! குற்றமற்ற வீட்டு இன்பத்தை உன் அருள் பொழியும் கடைக் கண்ணால் அளித்து அருள்வாயாக

54. முத்திக்கு வித்து;உன் அடியார்கள் சிந்தை
முளரிக்குஅ ருக்கன்; மொழிஎண்
சித்திக்கு மூலம்; தவயோகி கட்குத்
தெளிகன்னல் ஊறும் அமிர்தம்;
பத்திக்கு நித்தம் அருள்வீசு கொண்டல்;
களவீசன் எங்கள் பரமன்
அத்திக்கு முன்னம் வரமேஅ ளித்த
கருவேசன் அம்பொன் அடியே.

பொழிப்புரை :- வீட்டு உலகத்திற்கு ஒரு விதை; உனது அடியவர் களுடைய உள்ளமாகிய தாமரைக்கு இரவி; சொல்லப்படுகின்ற எட்டு விதமான சித்திக்கு மூலப்பொருள்; தவஞ் செய்வார்க்கும், யோகம் செய் வார்க்கும் தெளிந்த கருப்பஞ்சாறும், ஊற்றெடுக்கும் அமுதமும்; பக்தி செய்வார்க்கு நாள்தோறும் அருள்சுரக்கும் மேகம்; எது? திருக்களா நீழலில் எழுந்து அருளியிருக்கும் இறைவனும், எங்கள் பரம்பொருளும் ஆகிய யானைக்கு முன்னே வரந்தந்து அருளியவனுமான கருவாபுரியானின் அழகிய பொன் போன்ற திருவடி.

55. அடியார்இ ழைத்த பிழைகோடி நெஞ்சின்
அறியாத ஆதி முதல்வன்,
கொடியார்பு ரத்தை அழல்மூட அன்று
குறுமூரல் கொண்ட குழகன்,
நெடியோன்வ ழுத்து களவீசன் என்று
நினைதோறும் உள்ளம் நெகிழ
முடியேறும் அங்கை; புளகிக்கும் மேனி;
முகிழிக்கும் என்கண் இணையே.

பொழிப்புரை:- தம்அடியார் செய்த கோடி பிழைகளையும் நெஞ்சிற் கொள்ளாத ஆதியான முதல்வன்; கொடுமை உடையாராகிய அவுணர்களின முப்புரத்தைத் தீ எழுமாறு அந்த நாளில் சிறுநகை செய்த அழகன்; திருமால் வழிபடுகின்ற திருக்களா நிழலில் அமர்ந்த இறைவன் என்று எண்ணுந்தோறும், மனம் உருக, அழகிய கைகள் தலைமீது ஏறும்; உடம்பு மயிர்க்கூச்சு எறியும்; என் கண்கள் இரண்டும் குவிந்துகொள்ளும்.

56. என்கண்ணி டத்தில் அகலாத செல்வன்,
எழிலார்க ளாவின் முதல்வன்,
வன்கண்ணர் நெஞ்சு புகுதாத நம்பன்,
மனமாசுஅ றுத்த பெருமான்,
புன்கண்அ கற்றி அடியாரை வீடு
புகுவித்து நின்ற புனிதன்,
தன்கண்எ னக்கு முடியாத அன்பு
தரஎன்கொல் செய்த தவமே!

பொழிப்புரை :- என் கண்ணினின்றும் நீங்காத செல்வன்; அழகிய களாமரத்து நிழலில் அமர்ந்த ஆதி; பாவிகளது உள்ளத்தில் நுழையாத பெருமான்; உள்ளக் குற்றத்தை அறுத்து அருளிய எம்மான்; பிறவித் துன்பத்தை நீக்கி அடியவர்களை வீட்டு நெறியிற் செலுத்திய தூயவன். அத்தகைய சிறப்பு வாய்ந்த களவீசன், அவனிடத்து எனக்கு எல்லையற்ற அன்புதர, நான் செய்த தவம் எத்தகையது!

57. தவமும்த வத்தின் உறுபேறும் ஆன
தலைவா!க ளாவின் முதலே!
புவனங்கள் ஆவை; உயிர்வர்க்கம் ஆவை;
நுகர்போகம் ஆவை; புகலும்
திவசங்கள் ஆதி வருகாலம் ஆவை;
தெளிவார்தெ ளிந்த அமையத்து
இவையன்றி நிற்பை: எனின்,ஐய! நெஞ்சின்
எவரேம திப்பர் உனையே.

பொழிப்புரை :- தவமும், தவத்தில் தோன்றும் பயனுமான தலைவனே! களாமுதல் முளைத்த மூலமே! உலகங்களாக இருக்கின்றாய்; அவ்வுலகங்களி லுள்ள உயிர்களாகவும் இருக்கின்றாய்; அவ்வுயிர்கள் நுகரும் இன்பங்களாக வும் இருக்கின்றாய்; சொல்லத்தக்க நாள் முதலிய கால அளவைகளாகவும் இருக்கின்றாய்; உன்னை அறிந்தவர்கள், அறிந்த சமயத்தில் இவைக ளெல்லாம் இல்லாதவனாகவும் நிற்கின்றாய் என்றால், தலைவனே! உன்னை உள்ளத்தில் உணரவல்லார் யாவரே!

58. உன்நாமம் ஓதி உனையேவ ணங்கி
உறுபூசை பேணும் உரவோர்,
பொன்னொடுஅ ளிக்க வரம்நல்கும் ஆதி
புனிதா!க ளாவில் உறைவோய்!
முன்னேஉ னக்குயான் அடியானும் அல்லன்;
முழுஞானி அல்லன் எளியேன்;
என்னே!பி ழைத்த பிழைகோடி உள்ள,
எனிலும்பு ரத்தல் கடனே.

பொழிப்புரை :- உன் திருப்பெயர்களைச் சொல்லி உன்னையே தொழுது, உனக்குத் தக்க பூஜை செய்யும் அறிஞர்கட்கு வாழொடு அளிக்க வரம் அருளும் புனித முதல்வனே! களாமரத்தின் நிழலில் தங்கி இருப்பவனே! முன்னாளில் நான் உனக்கு அடியேனும் ஆக மாட்டேன். நான் சிவஞானியும் அல்லேன். எளியேன் ஆகிய நான் உனக்குக் கோடி பிழை செய்தாலும் என்னைப் பாது காத்து அருளுதல் உன் கடமை.

59. கடவார ணத்தின் உரிபோர்வை கொண்ட
கருவேச! ஆதி முதல்வா!
சடவாத னைக்குள் அவமேகி டந்து
தடுமாறும் நெஞ்சம் உடையேன்;
அடைவாய்வ ழுத்தி வழிபாடு செய்துஉன்
அடிபேண ஒன்றும் அறியேன்;
மடமால்அ கற்றி யிடுமாறு அளிக்கும்
வரம்நீகொ டுக்கும் வரமே.

பொழிப்புரை :- மதம் பொழிகின்ற யானையை உரித்துத் தோலைப் போர்வையாகக் கொண்ட கருவை இறைவனே! முழுமுதற் கடவுளே! சடப் பொருள்களின் பழக்கத்தில் வீணாகக் கிடந்து அலைக்கழிக்கப்படும் உள்ளத்தை உடைய யான், முறையாக உன்னைப் போற்றித் துதி செய்து உன் திருவடியை அடைய ஒன்றும் அறிய மாட்டேன். அறியாமை உடைய மயக்கத்தைப் போக்கியிடுமாறு எனக்கு நீ வரம் கொடுத்து அருளுதல் வேண்டும்.

60. வரையா தியற்றி யிடுபாவ காரி;
மறம்அன்றி வேறு புரியேன்;
விரைமாலை சுற்று குழலாரி டத்து
மிகஆசை வைத்து மெலிவேன்;
கரையாதி ருக்கும் மனம்நீக ரைத்துஉன்
அடிபாட வைத்த கதைநான்
உரையால்நி றைக்க முடியாது; முக்கண்
உடையாய்!க ளாவின் ஒளியே!

பொழிப்புரை :- நான் எல்லையின்றிக் கேடு செய்கின்ற பாவமுடையேன். பாவத்தைத் தவிர வேறு செய்ய மாட்டேன். மணமுள்ள மாலை சூடும் கூந்தலுடைய மங்கையரிடத்துப் பெரிதும் ஆசை கொண்டு மெலிவடைவேன். அத்தகைய கரையாத என் மனத்தை நீ கரையச் செய்து, உன் திருவடியை நான் பாட வைத்த கதையை நான் சொல்லால் நிறைவு படுத்த முடியாது. மூன்று கண் படைத்த கடவுளே! களா நிழல் இருந்த சோதியே!

## ஏழாம் பத்து

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

61. ஒளிமதி முடித்த வேணி
ஒருவனே! கருவை யானே!
தெளிவுறு நெஞ்சந் தன்னைத்
தெருட்டிநின் நிலையைக் காட்டி,
அருளினால் என்னை ஆண்ட
அருட்குன்றே! உன்னை இன்னும்
எளியனேன் பிறவி வேட்டோ
ஏத்திடாது இருக்கின் றேனே!

பொழிப்புரை:– ஒளியுள்ள திங்கள் சூடிய சடையை உடைய ஒப்பற்றவனே! கருவை எம்பிரானே! தெளியாத என் உள்ளத்தைத் தெளியச் செய்து நின்பெருமையை எனக்கு உணர்த்திக் கருணையினால் என்னை ஆண்டுகொண்ட அருள்மலையே! அடியனேன் இன்னும் பிறவியை விரும்பியா உன்னைப் போற்றாதிருக்கின்றேன்!

வேட்டல் - விரும்புதல்.

62. இருக்கினும் நிற்கும் போதும்
இரவுகண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும் போதும்
பொருந்திஊண் துய்க்கும் போதும்
முருக்குஇதழ்க் கனிவா யாரை
முயங்கிநெஞ்சு அழியும் போதும்
திருக்களா உடைய நம்பா!
சிந்தைஉன் பால தாமே.

பொழிப்புரை:- உட்கார்ந்திருக்கும்போதும், எழுந்து நிற்கும்போதும், இரவில் உறங்கும்போதும், விரைந்து நடக்கும்போதும், அமர்ந்து உணவு அருந்தும்போதும், முருக்கம்பூப்போன்ற சிவந்த பழம்போல் இனிக்கும் வாயை உடைய மகளிரை அணைந்து மனம்அழியும்போதும், திருக்களா நீழலில் அமர்ந்த பெருமானே! என் மனம் எல்லாம் உன்னிடத்தது ஆமே.

பொருக்கு – விரைவுக்குறிப்பு.

63. சிந்தனை உனக்குத் தந்தேன்,
திருவருள் எனக்குத் தந்தாய்;
வந்தனை உனக்குத் தந்தேன்,
மலரடி எனக்குத் தந்தாய்;
பைந்துணர் உனக்குத் தந்தேன்,
பரகதி எனக்குத் தந்தாய்;
கந்தனைப் பயந்த நாதா!
கருவையில் இருக்கும் தேவே!

பொழிப்புரை :- என் உள்ளத்தை உனக்கு அளித்தேன், உன் திருவருளை எனக்கு ஈந்தாய்; உனக்கு வணக்கம் செலுத்தினேன், உன் தாமரைத் தாளை என்க்கு நல்கினாய்; பசுமையான மலர்த் தொகுதியை உனக்கு இட்டேன், மேலான வீட்டு இன்பத்தை எனக்கு அருளினாய்; முருகக் கடவுளைப் பெற்ற தந்தையே! கருவாபுரியில் எழுந்து அருளியிருக்கும் கடவுளே!

64. தேவனே நின்னை யல்லால்
பிறிதொரு தேவை எண்ணேன்;
பாவனை நின்னின் அல்லால்
பிறிதொரு பற்றும் இல்லேன்;
யாவையுங் காட்டக் கண்டேன்;
என்னுளே நின்னைக் கண்டேன்;
காவலா! கருவை யானே!
இனிமற்றோர் காட்சி உண்டோ?

பொழிப்புரை :- மகாதேவனே! உன்னைத்தவிர வேறு ஒரு கடவுளை நினைக்க மாட்டேன்; உனக்கு வழிபாடு செய்தல் அல்லால் மற்றொரு பற்றும் எனக்கு இல்லை; எல்லாவற்றையும் நீ காட்டக் கண்டு கொண்டேன்; எனக்குள்ளே உன்னையும் கண்டேன்; எல்லாவற்றையும காக்கின்றவனே! கருவை வாழ்வே! இனி எனக்கு வேறு ஒரு காட்சியும் உண்டோ?

"கற்றைவார் சடையெம் அண்ணல் கண்ணுதல்
பாதம் நண்ணி, மற்றும்ஓர் தெய்வம் தன்னை
உண்டுஎன நினைந்துஎம் பெம்மான், கற்றிலா
தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே"

என்பது திருவாசகம்

65. உண்டுஎன மறைகள் ஓதும்
ஒருதனி முதலே! நாளும்
அண்டரும் முனிவர் தாமும்
காண்கிலர்; அடியேன் உன்னைத்
தெண்திரை வளாகம் முற்றும்
தேடினேன்; தேடித் தேடிக்
கண்டனன் களாவின் நீழல்
கருவைமா நகரத் தானே!

பொழிப்புரை:- நீ உண்டு என்று வேதங்களெல்லாம் சொல்லுகின்ற ஒப்பற்ற முழுமுதற் கடவுளே! நாள்தோறும் அமரர்களும், முனிவர்களும் உன்னைக் காணமாட்டார்; எளியேன் கடல்சூழ்ந்த உலகம் முழுதும் உன்னைத் தேடிப்பார்த்தேன்; தேடித்தேடி எங்கும் காணாது, களாமரத்து நீழலிலே கண்டுகொண்டேன்; கருவைப் பெருநகரத்திற்கு உரியவனே!

66. தான்என உருவம் ஆகிச்
சங்கற்ப விகற்பங் கொண்டு
வானகம் ஆகி மண்ணாய்க்
கடல்களாய் மலைகள் ஆகி
ஈனமாம் மனப்பேய் செய்த
இந்திர சாலந் தன்னால்
நான்உனை உணர மாட்டேன்,
களாநிழல் நண்ணு வானே!

பொழிப்புரை:- இழிந்த தன்மை வாய்ந்த மனம் என்னும் பேய் எல்லாப் பொருளையும், சங்கற்பத்தையும், விகற்பத்தையும் கொள்ளுதலால், வானாகியும், மண்ணாகியும், கடலாகியும், மலையாகியும் செய்த இந்திர சாலத்தினால் நான் உன்னுடைய இயல்பை அறியாதவன் ஆனேன்: திருக்களா நீழலில் பொருந்தியவனே!

சங்கற்பம் - ஒரு பொருளை எண்ணுதல்; விகற்பம் - வேறுபடுத்திக் கருதுதல்.

67\. நண்ணஅருந் தவங்கள் செய்து
நான்உடல் வருந்த மாட்டேன்;
எண்ணும்ஐம் புலனும் செற்றுஅங்கு
இருவினை அறுக்கமாட்டேன்;
கண்அகன் ஞாலம் போற்றக்
களாநிழல் அமர்ந்து வாழும்
அண்ணலே! இனிஎவ் வாறு
அடியனேன் உய்யும் ஆறே?

பொழிப்புரை:- செய்தற்கரிய தவங்கள் புரிந்து நான் என் உடலை வருத்திக்கொள்ளமாட்டேன்; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று கருதப்படுகின்ற ஐம்புலன்களையும் அழித்து, நல்வினை, தீவினை இரண்டையும் ஒழிக்கமாட்டேன்; இடம் அகன்ற உலகம் ஏத்தத் திருக்களா நீழலில் அமர்ந்து வாழ்கின்ற இறைவனே! இனி எப்படியோ அடியனேன் கடைத்தேறுவது?

68\. உய்யஓர் உறுதி நாடா
உலகினிற் சமயம் என்னும்
வெய்யஆர் கலியில் வீழ்ந்து
வெந்துயர் உழக்கின் றேற்குத்
தையல்ஓர் பாகம் வைத்துத்
தண்தமிழ்க் கருவை வாழும்
ஐயன்வந்து ஆண்டு கொண்டது
அதிசயம் விளைக்கும் ஆறே.

பொழிப்புரை:- தப்பிப் பிழைக்க ஒரு பிடிப்பை நாடி, உலகத்தில் உள்ள சமயங்கள் என்னும் கொடிய கடலில் வீழ்ந்து, பெருந் துன்பத்தில் உழல்கின்ற என்னை, மலைமகளை உடம்பின் ஒரு பகுதியிலே இருத்திக் குளிர்ந்த தமிழ் வழங்கும் கருவை நகரில் வாழும் தலைவன் வந்து ஆண்டு கொண்டது வியப்பைத் தருகின்றது.

வெய்ய - கொடிய; ஆர்கலி - கடல்.

69. அதிசயம் உளத்தில் காட்டி,
அகம்புறம் தன்னைக் காட்டி,
துதிசெயக் கவிநாக் காட்டி
தொடக்குஅரு நேயங் காட்டி,
மதியினிற் களிப்பும் காட்டி,
வந்துஎனை ஆண்டு கொண்டான்
கதிஎன உலகம் போற்றக்
களாநிழல் அமர்ந்த நாதன்.

பொழிப்புரை :- என் மனத்து ஆச்சரியத்தை உண்டாக்கி, என் உள்ளும் புறமும் தன்னைக் காட்டிக் கொண்டு, அவனைப் பாடக் கவிபாடும் நாக்கை அருளி, அறுக்க முடியாத அன்பைத்தந்து, உள்ளத்தில் மகிழ்ச்சியை ஊட்டி, வலிய வந்து என்னை அடிமை கொண்டான்; பற்றுக்கோடாக உலகம் எல்லாம் பாராட்டத் திருக்களா நீழலில் அமர்ந்த பெருமான்.

70. நாதனே! கவிஞன் ஏவ
நள்ளிருட் போதிற் சென்ற
தூதனே! இமய வல்லி
துணைவனே! கருவை யானே!
போத,நே யத்தி னுல்நின்
பொலன்கழல் தொண்டு பூண்டும்
ஏதம்நீ அகற்றி டாமல்
இருப்பதும் இசைய தாமோ?

பொழிப்புரை :- தலைவனே! கவிவலவன் அனுப்ப நடுயாமத்தில் சென்ற தூதுவனே! மலைமகளின் வாழ்க்கைத் துணைவனே! கருவைக் கடவுளே! ஞானத்தின் வழிவந்த அன்பினால் உன் பொன்னார் திருவடிசூட்த நான் அடிமை பூண்டிருந்தும், என் குற்றத்தை நீ போக்காமல் இருப்பது உனக்குப் புகழ் ஆகுமா?

கவிஞன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். போதம் - அறிவு. நேயம் - அன்பு. பொலன் - பொன், ஏதம் - மனக்குற்றம். இசை - புகழ்.

## எட்டாம் பத்து

### *கலிவிருத்தம்*

71. இசையும் செல்வமும் திருவும் இன்பமும்
அசைவுஇ லாதபேர் அறிவும் முத்தியும்
விசைய மும்தரும் கருவை மேவினேன்
திசைஉ டுத்தவன் சீர்ப டிக்கவே.

பொழிப்புரை :- புகழையும், செல்வத்தையும், பொலிவையும், இன்பத்தையும், கலங்காத பேர் அறிவையும், வீட்டையும், வெற்றியையும் நல்கும்; கருவாபுரியில் எழுந்து அருளியிருக்கின்ற திக்குகளை ஆடையாக உடுத்த சிவபெருமானின் புகழைப் பாடினல்.

72. படிஅ ளந்தவன், பதுமம் மேயவன்,
அடிமு டித்தலம் அறியொ ணாதவன்;
கடிகொள் மாமலர்க் களவின் நீழலான்,
குடிஇ ருக்களன் நெஞ்சு கோயிலே.

பொழிப்புரை :- உலகத்தை அளந்தவனுகிய திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் அறிய முடியாத திருவடியையும், திருமுடியையும் உடைய, மணம் தங்கிய சிறந்த பூக்கள் மல்கிய திருக்களா நீழலில் அமர்ந்த இறைவன், என் உள்ளக்கோயிலிலே குடியிருக்கக் கடவன் ஆவான்.

படி - உலகம். பதுமம் - தாமரை. கடி - மணம்.

73. கோயில் சூழவும் குடங்கை கொட்டவும்
வாயில் பாடவும் வணங்கி ஆடவும்
ஆயி ரம்பெயர்க் கருவை யாதிபன்
நேயம் உற்றுவாழ் தொண்டர் நேர்வரே.

பொழிப்புரை :- திருக்கோயிலை வலம் வரவும், உள்ளங் கைகளைக் கொட்டி ஆடவும், வாயினல் பாடவும், கும்பிட்டுக் கூத்தாடவும், ஆயிரம் திருப் பேர்களை உடைய கருவைத் தலைவனிடத்து அன்பு பூண்டு வாழ்கின்ற அடியார்கள் ஆசைப்படுவர்.

74. நேர்ந்த நெஞ்சமே! நெடிது வாடிநீ
சோர்ந்த துன்பமும் துயரும் போக்குவான்
வார்ந்த செஞ்சடைக் கருவை வானவன்;
ஆர்ந்த பேர்அருள் அருவி ஆடவே.

பொழிப்புரை :- விரும்பிய மனமே! பெரிதும் வாட்டமுற்றுத் தளர்ந்த உன் பெரும் துயரத்தை நீக்குவான்; நீண்ட சிவந்த சடையை உடைய கருவைத் தேவ தேவன்; அவன் பேரருளாகிய வற்ருத அருவியில் நீ நீராடுவாய் ஆனுல்.

75. ஆடு மட்கலத் திகிரி ஒத்துஅலைந்து
ஓடும் நெஞ்சமும் கவலை ஓர்ந்துஉனை
நாடு மோ?தமிழ்க் கருவை நம்பனே!
ஏடு சேர்மலர்க் களவில் ஈசனே!

பொழிப்புரை :- சுழலுகின்ற மண்பாண்டம் செய்யும் சக்கரத்தை ஒத்து அலைந்தோடுகின்ற உள்ளத்தையும், கவலையையும் ஆராய்ந்து, உன்னை ஆட்கொள்வானு? தமிழ்க் கருவையில் வாழும் இறைவனுகிய இதழ் பொருந்திய மலரையுடைய களா நிழலில் அமர்ந்த கடவுள்.

76. ஈச னே!இடத்து இமய வல்லியின்
நேச னே!இயற் கருவை நித்தனே!
பூசி யேன்உனை; புனித ஆகமம்
வாசி யேன்;பிறப்பு என்று மாயுமே.

பொழிப்புரை :- இறைவனே! இடப் பக்கத்தில் அன்புடன் மலைமகளை ஆள்பவனே! இயற்கை வளம் மிக்க கருவாபுரியில் என்றும் உள்ளவனே! உன்னைப் பணிய மாட்டேன்; தூய்மையான சிவாகமத்தைப் படிக்க மாட்டேன்; என் பிறப்பு என்று ஒழியும்.

77. பிறவி மாயவும் அருள்பெ ருக்கவும்
துறவி யாய்வனம் துன்னல் வேண்டுமோ?
இறைவன் எம்பிரான் களவில் ஈசன்என்று
அறையும் முன்னமே அனைத்தும் எய்துமே.

பொழிப்புரை :- பிறவி அழியவும், அருட் பெருக்கு அடையவும், துறவு பூண்டு காடு செல்லுதல் வேண்டுமோ? இறைவன் என்றும், எம் தலைவன் என்றும், களாநிழல் அமர்ந்த கடவுள் என்றும் சொல்லுதற்கு முன்னே எல்லா நலனும் வந்து சேருமே.

78. எய்தி என்செயும்? கருவை எம்பிரான்
கொய்யும் நான்மலர்க் கொன்றை வேணியான்
செய்ய பாதம்என் சென்னி வைக்கவே,
வெய்ய கூற்றுவன் வீசு பாசமே.

பொழிப்புரை :- கொடிய காலன் வீசும் பாசக் கயிறு என்னை அடைந்து என்ன செய்துவிடும்? கருவைத் தலைவனும், கொய்து அணியும் அன்று பூத்த கொன்றை மாலை சூடிய சடையை உடையானும் ஆகிய இறைவனுடைய சிவந்த திருவடியை என் சென்னியில் அவன் வைக்கும் போது.

79. பாசம் நீக்கி,மூ வகைப்ப சுக்களை
மாசில் முத்தியாம் வனத்தில் மேய்த்திடும்,
ஈசன், மின்னைநேர் இடைச்சி காதலன்;
ஆசுஇல் பால்வணத்து அண்டர் நாதனே.

பொழிப்புரை.- மூன்று வகையான உயிர்கள் என்னும் பசுக்களைப் பந்தத்தினின்றும் அறுத்துக் குற்றம் அற்ற வீடு என்னும் காட்டில் மேய்த்திடும் ஈசன், மின்னலை ஒத்த இடையை உடைய உமையவளின் காதலன் ஆகிய களங்கமற்ற பால்போன்ற நிறத்தை உடைய தேவர்கள் தலைவனே!

மூவகை உயிர்கள் – விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் ஆவர். அண்டர் என்பதற்கு அமரர் என்றும் இடையர் என்றும் பொருள். பசு, வனம், இடைச்சி, அண்டர், நாதன் ஆகியன இரண்டு பொருள்களைத் தருகின்றன.

80. அண்ட கோளமும் அகில லோகமும்
மண்டு செந்தழல் வடிவம் ஆனவன்,
முண்ட கக்கழல் கருவை மூர்த்தியைக்
கண்ட கண்இணை களி,து ளங்குமே.

பொழிப்புரை :- எல்லா அண்டங்களும், எல்லா உலகங்களும் நிறைந்த செந்தீ வடிவமானவன் ஆகிய தாமரை போன்ற திருவடியை உடைய கருவையில் எழுந்து அருளியிருக்கின்ற மூர்த்தியைக் கண்ட இரு கண்களும் ஆனந்தக் களிப்பினால் விளங்கித் தோன்றும்.

## ஒன்பதாம் பத்து

*கலிநிலைத் துறை*

81\. துளங்கு நெஞ்சமே! துயர்உறு
வகைஒன்று சொல்வேன்;
வளங்கொள் செந்தமிழ்க் கருவையம்
பெரும்பதி மருவி,
விளங்கு பால்நிற மேனியன்
திருவடி தொழுதால்
அளந்து காண்பருந் துறக்கவாழ்வு
இம்மையின் அளிப்பான்.

பொழிப்புரை:- அசைகின்ற மனமே! நீ துன்புறுதிருக்க ஒரு வழி மொழிவேன்; வளம் மிகுந்த செந்தமிழ் வழங்கும் கருவைமாநகர் நண்ணி, அங்கு வீற்றிருக்கின்ற பால்போலும் வண்ணத்தை உடைய இறைவனது திருவடியைப் பணிந்தால், அளவிட்டுக் காணமுடியாத வீட்டு இன்பத்தை இப் பிறவியிலேயே அவன் தருவான்.

82\. இம்மை இன்பமும் இறுதியில்
முத்தியும் அளிக்கும்,
நம்மை ஆளுடை நாயகன்
கருவைநன் நகரில்
கொம்மை வெம்முலைக் கொடியொடும்
இனிதுவீற் றிருக்க,
விம்மி மானுடர் வெந்துயர்
உழப்பதென் விரகே.

பொழிப்புரை :- இப்பிறவியில் இன்ப வாழ்வையும், முடிவிலே வீடு பேற்றையும் தந்தருளுவான்; நம்மை ஆட்கொண்ட தலைவன்! அப்பெருமான் கருவைத் திருநகரில், அழகிய, விரும்பத்தக்க, தனங்களை உடைய, கொடி போன்ற ஒப்பனை அம்பிகையுடன் இனிமையாக இருந்து அருள, அதனை அறியாது மனிதர்கள் பொருமிக் கொடிய துயரத்தை அடைவது அறிவுடைமையாகுமா?

கொம்மை - அழகு. விரகு - அறிவு.

83. விரகி னுல்சிலர் செய்திடும்
        வினைகளும் உண்டோ?
    மருவி அம்பரம் மறைந்துநின்று
        ஆட்டுவான் போல,
    உரக கங்கணக் கருவையான்
        ஒருவன்நின்று ஆட்டப்
    பரவை சூழ்நில மன்பதைப்
        பரப்பெலாம் நடிக்கும்.

பொழிப்புரை - தம் அறிவினுல் சில மனிதர்கள் செய்யும் காரியங்களும் உள ஆகுமா? பொருந்தித் திரைச்சீலையில் மறைந்து நின்று ஆட்டுகின்ற வனைப்போலப் பாம்புகளைக் காப்பாக அணிந்த கருவாபுரிக்கு இறைவனுகிய ஒப்பற்றவன் நின்று ஆட்ட, கடல் சூழ்ந்த உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்கள் எல்லாம் நடிக்கும்.

மருவி - பொருந்தி அம்பரம்-சீலை. உரகம் – பாம்பு. கங்கணம்- காப்பு பரவை - கடல். மன்பதை—உயிர்.

84. நடித்த தாள்களும் நகைமணி
        முறுவலும் முகமும்
    பொடித்த வேர்வுஎழும் புருவமும்
        அருள்,விலோ சனமும்
    முடித்த தண்பிறை வேணியும்
        முகலிங்கன் மழு,மான்
    பிடித்த செங்கையும் காண்பவர்
        புவியிடைப் பிறவார்.

பொழிப்புரை :- நடனமாடும் திருவடிகளும், ஒளி விடுகின்ற அழகிய புன்சிரிப்பும், வியர்வை அரும்பும் திருமுகமும், மேல்எழும் புருவமும், கருணை பொழிகின்ற கண்களும், குளிர்ந்த திங்கள் சூடிய சடைமுடியும், முகலிங்கப் பெருமானின் மழுமான் தூக்கிய சிவந்த கைகளும் காணப்பெறுபவர் உலகத்து இனிப்பிறவி அடையார்.

பொடித்த - அரும்பிய. வேர்வு – வியர்வை. இதனை முகத்தொரடு கூட்டுக. விலோசனம் – கண்.

85. பிறந்த யாக்கைகள் அளப்பில
பெருங்கடல் புவிக்குள்
இறந்து போயதல் லால்அவற்று
எய்தியது உண்டோ?
கறந்த பால்நிற வண்ணனைக்
கருத்துற இருத்திச்
சிறந்த யாக்கையீது! இதற்குநான்
செய்வதும் உளதோ?

பொழிப்புரை :- பிறந்த உடம்புகள் கணக்கில்லாதன பெரிய கடல் சூழ்ந்த உலகத்தில். இறந்து போயதைத்தவிர அப்பிறப்புக்களால் எய்திய பயன் ஏதுமில்லை. கறந்த பால்போன்ற நிறத்தை உடைய பால்வண்ண நாதனை உள்ளத்திலே பதித்து, அதன் சிறப்பு எய்திய உடம்பு இப்பிறப்பு; ஆதலால் இப்பிறப்பிற்கு நான் செய்யத்தக்க கைம்மாறு உளதோ?

86. உள்ளது இல்லதுஎன்று உரைத்திடும்
பொருளைஉய்த்து உணராக்
கள்ளர் நாவினில் இருந்திடாக்
களாநறுங் கனியை,
தெள்ளு செந்தமிழ்க் கருவையில்
சினகரம் புகுந்து,
மெள்ள நான்சென்று காண்டலும்
தீர்ந்தது விடாயே.

பொழிப்புரை :- உள்ளதென்றும், இல்லதென்றும் மாறுபட்டுச் சொல்லப்பெறுகின்ற பொருளாகிய கடவுளை, ஆராய்ந்து அறியாத வஞ்சகர் நாவினில் பொருந்தாத களா மரத்தின் நல்ல பழத்தை, தெளிந்த செந்தமிழ்க் கருவாபுரியில் திருக்கோயிலுள் நுழைந்து, பைய நான் சென்று பார்த்தவுடன் என் விருப்பம் முடிந்தது.

சினகரம் - கோயில். 'கோயில்புக்குக் கண்டவுடன் வீடு பெற்றேன்' என்பது கருத்து.

87. விடக்கை, மும்மலக் குழிசியை,
விளிந்தபின் தீண்டாத்

துடக்கை, நோய்க்கணம் துணங்கையிட்டு
ஆடுறும் அரங்கை,

நடக்கும் சூத்திரப் பாவையை
நான்சுமந்து உழலல்

கடக்க நீக்கிஎன்று ஆளுவை?
கருவைஉத் தமனே!

பொழிப்புரை : ஊன் கடையை, மும்மலங்களின் கொள்கலனை, இறந்த பின்பு தொடத் தகாத ஒரு பொருளை, பிணிக் கூட்டங்கள் எல்லாம் கூத்து ஆடுதற்கு இடமான அரங்கத்தை, நடந்து செல்கின்ற சூத்திரப் பதுமையை நான் தாங்கி உழல்வதினின்றும் நீங்கி விடும்படி, என்னை எப்பொழுது ஆட் கொள்ளுவாய்? கருவையில் வாழும் மேலானவனே!

விடக்கு - ஊன். குழிசி – பாத்திரம். விளிதல் - சாதல். கணம் - கூட்டம். துணங்கு - ஒருவகைக் கூத்து. அரங்கு - கூத்தாடும் மேடை.

88. உத்தி வாளரா முடித்தபால்
வண்ணனே! உனது

பத்தி வேண்டுவது அன்றியே
நரகிடைப் படினும்

முத்தி வேண்டிலேன்; துறக்கமும்
வேண்டிலேன்; முனிவர்

சித்தி வேண்டிலேன்; வேண்டிலேன்
திசாதிபர் சிறப்பே.

பொழிப்புரை :- புள்ளிகள் பொருந்திய படத்தைப் பெற்ற ஒளியுள்ள பாம்புகளை அணிந்த பால்வண்ண நாதனே! உன்னிடத்துப் பத்தி செய்வதை வேண்டுவதைத் தவிர, நரகம் புகினும், வீடு பேற்றை விரும்பேன்; சுவர்க்க இன்பத்தையும் கருதேன்; முனிவர்கள் அடையும் சித்தியையும் வேண்ட மாட்டேன்; திசைக் காவலர்களுக்குரிய சிறப்புக்களையும் நினைக்க மாட்டேன்.

உத்தி - பாம்பின் படம்; திசாதிபர் - திக்குப் பாலகர்.

89. சிறக்கத் தக்கது கருவையான்
திருவடி நேயம்;
மறக்கத் தக்கது மற்றுள
சமயத்தின் மயக்கம்;
துறக்கத் தக்கதுஇவ் உடம்பை,யான்
என்றுறு தொடர்பு;
பிறக்கத் தக்கது சிவானந்த
வாரியின் பெருக்கே.

பொழிப்புரை :- கருவாபுரி ஆண்டவனின் திருவடிக்கு வைக்கும் அன்பே சிறப்புறத் தக்கது; வேறு உள்ள சமயங்களின் மயக்கமெல்லாம் மறக்கத் தகுவது; இவ்வுடம்பை நான் எனக் கொள்ளும் அகங்காரத் தொடர்பு தள்ளத் தக்கது; தோன்ற வேண்டுவது கடலனைய சிவானந்த வெள்ளமே.

90. பெருகு காதல்கொண்டு அனுதினம்
பேதைநெஞ்சு அடியேன்
உருகி நாடவும் வெளிப்படா
உனை,உளத்து உணர்ந்தேன்;
இருகண் ஆரவும் காண்பதற்கு
என்றுஎதிர்ந் திடுவாய்!
கருகு கண்டனே! கருவையில்
களாநறுங் கனியே.

பொழிப்புரை :- பெருகிய அன்பினால் நாள்தோறும் அறியா மனமுடைய எளியேன், உன்னை உருகித் தேடவும், வெளித் தோன்றா உன்னை மனக் கண்களிற் கண்டு கொண்டேன்; என் இரு கண்களும் நிறையக் காண்பதற்கு நீ எப்பொழுது எதிர்ப்படுவாய்? நஞ்சுண்டு கருத்த கழுத்தை உடையவனே! கருவையில் எழுந்தருளியுள்ள நல்ல களாப் பழமே!

எண் சீர் ஆசிரிய விருத்தம்

91. கனிவு ருமனம் கனிய நின்பெரும்
கருணை தந்தவா! போற்றி! நாயினேன்
இனிய பாடலால் களவின் ஈசனென்று
ஏத்த நாத்தரும் இறைவ! போற்றி!வான்
பனிநி லாவுடன் கங்கை துன்றுசெம்
பவள வார்சடைப் பரம! போற்றி!வில்
குனிவு ருமுனம் புரம்எ ரித்திடக்
குருத்த வாள்நகைக் குழக! போற்றியே.

பொழிப்புரை :- கனிவு பெருத என்னுள்ளம் கசிந்து உருக, நின் பெரிய அருளை அளித்தவனே! வணக்கம்! அடியனேன் இனிமைமிக்க கவிகளால் களவின் தலைவன் என்று உன்னை ஏத்த வாய்தந்த வள்ளலே! வணக்கம்! வானிற் பொருந்திய குளிர்ந்த திங்களுடன் கங்கை தங்கிய செம் பவளம் போன்ற நீண்ட சடையையுடைய மேலானவனே! வணக்கம்! வில் வளைவதற்கு முன்னே திரிபுரம் தீயாகக் கோபித்த ஒளி பெறச் சிரித்த அழகனே! வணக்கம்!

பனி – குளிர்ந்த. குனிவுறுதல் - வளைதல். குருத்த - கோபித்த.

92. குழவி வெண்நிலா அனைய வெண்நகைக்
கொடி,இ டத்துவாழ் குரிசில்! போற்றி!என்
பழைய தீவினைப் பகைதொ லைத்திடும்
பாவ நாசனே! போற்றி! காய்சினத்து
உழுவை யின்வரித் தோல்அ சைத்தபட்டு
உடைம ருங்கினோய்! போற்றி! செந்தமிழ்க்
கழும லப்பதிக் கவுணி யன்புகழ்
களவின் நீழலிற் கடவுள்! போற்றியே.

பொழிப்புரை :- இளந்திங்கள் அனைய வெள்ளிய பற்களைக் கொண்ட ஒப்பனைக் கொடியை இடப்புறம் வைத்த சிறப்புப் பொருந்தியவனே! வணக்கம்! எளியேனுடைய முந்தைத் தீவினைகள் ஆகிய பகையை அழித் திட்ட பாவத்தைக் கெடுப்பவனே! வணக்கம்! கடுங்கோபத்தை உடைய புலியின் கோடுகள் பொருந்திய தோலைப் பட்டு உடைபோல் அணிந்த இடையை உடையவனே! வணக்கம்! செந்தமிழ் வல்ல சீர்காழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் புகழ்ந்து பாடும் களவின் நீழலில் தங்கிய கடவுளே! வணக்கம்!

உழுவை - புலி. மருங்கு - இடை. கழுமலப்பதி - சீர்காழி கவுணியன் - கவுணிய கோத்திரத்தில் பிறந்த ஞான சம்பந்தன்.

93. கடையு கத்தினிற் பொழில்கள் ஏழையும்
கனல்கொ ளுத்திய சுடலை யம்பலத்து
அடலை பூசிஎன் அம்மை காண நின்று
ஆடும் ஐயனே! போற்றி! போற்றி!நெஞ்சு
இடைவி டாமல்உன் சரண பங்கயத்து
இருக்க நல்கிய இறைவ! போற்றி!மால்
விடையின் மேவியே கருவை மாநகர்
வீதி வாய்வரும் விமல! போற்றியே.

பொழிப்புரை :- யுக முடிவில் ஏழு உலகங்களையும் நெருப்புப் பற்ற, சுடுகாடு ஆகிய அரங்கத்திலே சாம்பலைப் பூசிக் கொண்டு உமையவள் காண நின்று நடமாடும் தலைவனே! வணக்கம்! வணக்கம்! இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காமல் உன் திருவடித் தாமரையை இருக்கத் தந்து அருளிய கடவுளே! வணக்கம்! பெரிய இடபத்தின் மீது இவர்ந்து, கருவைப் பெரு நகரின் திருவீதி வலம் வரும் பழுதில்லாதவனே! வணக்கம்!

பொழில் - உலகம். 'ஏழ் பொழிற்கும் நாதன்' என்பர் திருவாசக ஆசிரியர். அடலை - சாம்பல்.

"இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!" என்ற திருவாசகம் இங்கு ஒப்பிடத் தக்கது.

94. விமல! போற்றி!நின் பெருமை நாரணன்
விரிஞ்சன் ஆதியோர் அறிய கிற்றிலா
அமல போற்றி!நான் அறியும் வண்ணம்முன்
அறிவு தந்தருள் அறிவ! போற்றி!தண்
கமல வாவிசூழ் கருவை மாநகர்க்
களவின் நீழல்வாழ் கால காலனே!
இமய மால்வரைக் குமரி ஒப்பனைக்கு
இனிய காதல! போற்றி! எந்தையே!

பொழிப்புரை :- பழுது அற்றவனே! வணக்கம்! உன் சிறப்பைத் திருமாலும், பிரமன் முதலானோரும் அறிய முடியாத மலமற்றவனே! வணக்கம்! அத்தகு உன் சிறப்பை நான் அறிந்து கொள்ளும் வண்ணம் முன்னே அறிவு தந்து அருளியவால் அறிவனே! வணக்கம்! குளிர்ந்த தாமரைத் தடாகம் மருவிய கருவைப் பெரு நகரத்தில் களா மரத்து நீழலில் வாழ்கின்ற எமனுக்கு எமனே! இமயப் பெருமலையின் மகளாகிய ஒப்பனைக் குமரிக்கு இன்பமயமான காதலனே! என் தந்தையே! வணக்கம்!

விரிஞ்சன் - பிரமன்.

95. எந்தை ஆயினுய்! குரவன் ஆயினுய்!
இறைவன் ஆயினுய்! போற்றி! என்மனப்
பந்தம் ஆயினுய்! வீடும் ஆயினுய்!
பரமும் ஆயினுய்! போற்றி! தென்புலச்
சந்த மால்வரைத் தமிழ்மு னிக்குஉமை
தனைம ணந்தமெய்க் கோலம் காட்டினுய்!
சுந்த ரப்புயத்து அழகு போற்றி! நல்
சோதி! பால்வணத்து ஆதி! போற்றியே.

பொழிப்புரை :- எனக்குத் தந்தையாக ஆனுய்! ஆசான் ஆனுய்! தலைவனும் ஆனுய்! வணக்கம்! என் உள்ளத்தின் பற்றுக் கோடாக ஆனுய்! வீடுபேறும் ஆயினுய்! அதற்கு மேம்பட்ட பொருளும் ஆனுய்! வணக்கம்; தென் திசையில் உள்ள சந்தனம் மல்கிய பெரிய பொதிய மலைத் தலைவன் ஆகிய தமிழ் முனிவன் அகத்தியனுக்கு, உமையவளை நீ மணந்து கொண்ட உண்மைத் திருக் கோலத்தைக் காட்டி அருளினுய்! உன் பேரழகுள்ள தோளுக்கு வணக்கம்! நல்ல ஒளி வடிவமே! பால் வண்ண முதல்வனே! உனக்கு வணக்கம்!

96. ஆதி நின்திருத் தொண்டு காதலித்து
அறிவு சென்றமட் டாக நின்புகழ்
ஓது செய்யுளில் குறைஉ ரைத்ததுஇங்கு
ஒன்றும் நின்செவிக்கு உற்ற தில்லையோ?
காதல் நண்புடைக் கவிஞன் ஏவலும்
கங்கு லிற்கழல் கால்சி வப்புறத்
தூது சென்றவா! போற்றி! நாள்தொறும்
தொழும்அ வர்க்குஅருள் கருவை ஐயனே!

பொழிப்புரை :- முழுமுதலாகிய உன் திருத் தொண்டைக் காதல் கொண்டு என், அறிவுக் கெட்டிய வரை நின் கீர்த்தியைப் பாடிய கவிகளில் என் குறைகளை நான் சொல்லிய எதுவும் உன் காதுகளுக்கு இதுவரை எட்டவில்லையா? உன்னிடத்து அன்புத் தோழமை கொண்ட தம்பிரான் தோழன் என்னும் கவிவலவன் சுந்தரன் ஏவியவுடன் நள்ளிருளில் வீரக்கழல் அணிந்த உன் திருவடி சிவப்புறத் தூது நடந்தவனே! நாள் தோறும் வணங்குகின்றவர்க்கு அருள் சுரக்கும் கருவைத் தலைவனே! வணக்கம்

97. ஐய னே!சரண் போற்றி! என்னையாள்
அப்ப னே!சரண் போற்றி! பொய்யிலா
மெய்ய னே!சரண் போற்றி! வானவர்
வேந்த னே!சரண் போற்றி! மான்மழுக்
கைய னே!சரண் போற்றி! காலனைக்
காய்ந்த வா!சரண் போற்றி! தீநிறச்
செய்ய னே!சரண் போற்றி! காமனைச்
செற்ற வா!சரண் போற்றி! தேவனே!

பொழிப்புரை :- என் ஐயனே! உன் திருவடிகட்கு வணக்கம்! என்னை ஆட்கொண்ட அப்பனே! உன் திருவடிகட்கு வணக்கம்! பொய்யில்லா உண்மையானவனே! உன் திருவடிகட்கு வணக்கம்! தேவர்கட்கெல்லாம் மன்னனே! உன் திருவடிகட்கு வணக்கம்! மானும் மழுவும் ஏந்திய கையை உடையவனே! உன் திருவடிகடகு வணக்கம்! எமனைக் கோபித்தவனே! உன் திருவடிகட்கு வணக்கம்! நெருப்புப்போல் சிவந்த மேனியனே! உன் திருவடிகட்கு வணக்கம்! மன்மதனை அழித்த தேவனே! உன் திருவடிகட்கு வணக்கம்!

98. தேவ னே!பிறர்க்கு அடிமை உற்றிலேன்;
சிந்தை நின்வசம் தந்தது அன்றியும்
நாவி னுல்தினம் பரவி வாழ்த்துவேன்;
நாளும் என்குறை தீர்ப்பது ஆர்கொலோ?
காவல் மூஅரண் கனல்கொ ளுத்திடக்
கருணை செய்திடும் கடவுள்! போற்றி!யான்
பாவ காரியே எனினும் என்னை நீ
பாது காப்பதுஉன் பண்ப தாகுமே.

பொழிப்புரை :- கடவுளே! உன்னையன்றிப் பிறர்க்கு அடிமைஆவேன் அல்லேன்; என் உள்ளத்தை உன்னிடம் தந்தது அல்லாமல் நாளும் நாவினுல் உன்னையே பாடி வாழ்த்துவேன்; அவ்வாருக நாள்தொறும் என் குறையைத் தீர்ப்பவர் உன்னை அன்றி வேறு யார்? காவல் பொருந்திய மூன்று கோட்டைகளையும் நெருப்புப்பொறி பறக்கக் கொளுத்தி, உலகத்திற்கு அருள்சுரந்த கடவுளே! உனக்கு வணக்கம்! நான் பாவங்கட்கு இருப்பிடமே என்ருலும் என்னைப் பாதுகாத்து அருளுவது உன் அருட்குணமாகும்.

99. பண்ப யிற்றிவண்டு ஆடு கொன்றையம்
படலை மார்பனே! போற்றி! அம்பிகை
கண்க ளித்திடத் தில்லை மன்றினில்
கடிந டம்புரி கடவுள்! போற்றி!பூஞ்
சண்ப கச்செழுங் காவின் வேரிசூழ்
தண்க ளாவனத் தடிகள்! போற்றி!மீ
விண்ப ரிப்பவன் தொழுத நம்பனே!
வெள்ளை மேனியாய்! போற்றி! போற்றியே.

பொழிப்புரை :- இசைபாடிக்கொண்டு வண்டுகள் மொய்க்கின்ற அழகிய கொன்றை மாலையை அணிந்த மார்பை உடையவனே! வணக்கம்! சிவகாமித்தாய் கண் களிக்கத் தில்லை அம்பலத்திலே சிறப்பாக நடனம் ஆடுகின்ற கூத்தப்பெருமானே! வணக்கம்! எழில்மிக்க சண்பகச் செழுஞ் சோலையின் இடையே தேன் கமழுகின்ற குளிர்ந்த களாக்காட்டில் எழுந் தருளியிருக்கின்ற அடிகளே! வணக்கம்!: மேலுலகத்தை ஆளுகின்றவனுகிய தேவேந்திரன் வணங்கிய சிறப்பு உடையவனே! பால்போன்ற வெள்ளை நிறம் உடையவனே! உனக்கு வணக்கம்! வணக்கம்!

பண் - இசை. படலை - மார்பில் அணியும் மாலை. மீ - மேல். பரிப்பவன் - காப்பவன். வேரி - தேன்.

100. வெள்ளை மேனியாய்! போற்றி! ஒப்பனை
மேவு மார்பனே! போற்றி! போற்றி!பூங்
கள்ள லம்புதண் களவின் நீழலில்
கருணை யங்கடற் கடவுள்! போற்றி!நான்
உள்ளம் ஒன்றிநின்று அடிவ ழுத்திட
உதவி செய்தவா! போற்றி! இன்புறத்
தெள்ளு செந்தமிழ்க் கருவை மாநகர்ச்
செல்வ! போற்றி!நின் சீர்கள் போற்றியே.

பொழிப்புரை :- வெண்ணிறவண்ணனே! வணக்கம்! ஒப்பனை அம்மை பொருந்திய திருமார்பை உடையவனே! வணக்கம்! வணக்கம்! தேன் ததும்பும் பூக்களை உடைய குளிர்ந்த களாமரத்து நீழலில் அமர்ந்த கருணையங்கடல் போன்ற கடவுளே! வணக்கம்! நான் மனம் பொருந்தி நின்று உன் திருவடியைத் தொழுவதற்குத் துணை செய்தவனே! வணக்கம்! தெளிந்த செந்தமிழ்க் கருவைமாநகர் இன்புற்றுவாழ எழுந்தருளிய செல்வனே! வணக்கம்! உன் புகழ்கட்கு வணக்கம்!

"சீர்கள் போற்றியே" என்ற இறுதிப்பகுதி "சீரார்" என்ற முதற்பாடலோடு மண்டலித்து அந்தாதி பெற்றதைக் காண்க.

முற்றும்

# திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதி

## பாட்டு முதற்குறிப்பு

